# பெண்மலையாளம்.



இது

ராவ் பஹதூர்

கே. வீரேசலிங்கம் பந்துலுகாரு

தெலுங்கில் இயற்றிய

'சத்தியராஜ அபூர்வதேசயாத்திரை' யினின்றும்,

க. கிருஷ்ணஸ்வாமி ஐயர், பீ. ஏ.

தமிழில்மொழிபெயர்த்தது.

---

சென்னை:

ராயல்விக்டோரியா யந்திரசாலையில்

பதிப்பித்தது.

1901

# பெண்மவஸ்யாளம்.



## அத்தியாயம் 1.

---

நான் பரிதாபி வருஷம் சித்திரைமாதம் சுத்த நவமி புஷ்ய நக்ஷத்திரம் ஸ்ரீராமர் பிறந்த தினமாகிய ஸ்ரீராமநவமி யன்று விஜயநகரத்திற் பிறந்தேன். எங்கள் குடிப்பெயர் பத்ரியார். என் தகப்பன்பெயர் வியாசராயாச்சாரியார். என் தாய் லக்ஷ்மீபாயம்மாள். என் தகப்பனார் நான் சத்தியவந்தனாய் இருப்பேனென்றோ, இந்த உண்மையான கதையை யெழுதுவே னென்றறிந்தோ, அன்றி அவருக்கே உண்மையில் அதிக பிரியமிருந்ததினாலோ எக்காரணத்தைக் கொண்டோ வழக்கம் போல் என் பாட்டனார் பெயரை எனக்கிடாமல் சத்தியராஜாசார்யா என்கிற புதுப் பெயரைக் குழந்தையிலேயே யிட்டார். எனது பிதா ஜோதிட சாஸ்திரத்தில் விசேஷ பாண்டித்தியம் பெற்றிருந்தமையால் அம்மகான் தன் விசேஷ ஞானத்தினாலேயே எனது பிற்கால மகிமையை அறிந்து அப்பெயரிட்டனர் போலும். 'நல்லவர்கள் நெடு நாளிரார்கள்' என்னும் பழமொழிக் கேற்ப என் குழந்தைப் பருவத்திலேயே என் தகப்பனார் சுவர்க்கத்தை யடைந்தமையால் என் பெயரைக் குறித்து முழுமையும் நான் அவரைக் கேட்டறிந்து கொள்ள அவகாசமில்லாமற் போய் விட்டது. சத்யராஜாச்சாரியா என்பது என் பெயராயிருந்தாலும் ஊரார் சத்ய ராயாச்சாரியா என்றழைப்பது வழக்கம். ராஜா என்பது

ராயா என்று மாறுவது வழக்கந்தானே. மேலும் ஜகரத்துக்கு யகரம் போலியன்றோ? வடமொழியிலுள்ள புஜம் என்பது தமிழில் புயம் என்று வழங்கி வரவில்லையா? இவ்வித சப்த தத்துவ விதிகளைக் கூறுவது என் கொள்கையன்று ஆதலால் நான் இப்போது சொல்லிவந்த விஷயத்தைப் பற்றிப் பின்னுங் கூறுவேன். எவ்விதமாய் என் பெயரை யுச்சரித்தபோதிலும் அஃது அர்த்தமுள்ள பெயரென்று நான் சொல்வது அநாவசியம். நான் இப்பொழுது சொல்லப்போகும் கதையே, ஆயிரம் நாவுள்ள ஆதிசேஷனைப் போல் என் பெயரை, உலகமுழுமையும் பரவச்செய்யும். தற்புகழ்ச்சி அருவருக்கத் தக்கது ஆகையால் எனது சத்தியத்தைப் பற்றி இனி அதிகமாய்ச் சொல்லேன். நான் அநுஷ்டிக்கும் சத்திய மதமே என் கதையின் உண்மையை ஸ்தாபிக்கும். எங்கள்மதத்தை ஆதியில் உண்டாக்கின மத்வாசாரியர், முன்னுலிருந்த பொய் மதங்களைத் தம்கருணையினால் நிக்ரகித்து அநேகநாளாய்க் கவனிப்பாரற்றுக் கிடந்த சுருதி ஸ்மிருதிமுதலியவைகளிலுள்ள விலையிலா ரத்தினங்களைப் பிரம்ம லோகத்தினின்றுங் கொணர்ந்து பிராம்மணரது பரம்பராசாரப்படி உண்மையான துவைத மதத்தை எல்லோரும் ஆமோதிக்குமாறு ஆஞ்சனேயரது பேருதவியாலும் பேரருளாலும் ஸ்தாபித்தது, சத்தியத்தினிடத்துள்ள அன்பாலன்றோ? அவ்வகைப்பட்ட உண்மை மதத்திற் பிறந்து சத்திய விரதத்தைக் கைக்கொண்ட நான் ஒரு மொழியாவது பொய்பேசுவேனோ? இதை வாசிப்பவர்களே! நான் சொல்வதை நம்பி இந்நூலிலுள்ள ஒவ்வொரு வாக்கியத்தையும் வேதவாக்கியமாய்க் கொள்ளுங்கள். நான் சொல்லப்போகும் விஷயங்கள் மனிதர்கள் அறியாத தேவர்களுக்குத் தெரிந்த ரகசியமா யிருந்தாலும் என் தேசத்தாராகிய உங்களிடத்துள்ள சகோதரவாஞ்சையால் மர்மத்தைவிட்டுச் சொல்லுகின்றேன்.

என் தகப்பனுர் சிறுபிராய முதல் புரோகிதராய்த் தன் வாழ்நாள் முழுவதும் அவ்வாறே கழித்த சுத்த வைதிகரா யிருந்த போதிலும் அவர் புத்திரனுகிய நான் எனது கர்ம விசேஷத்தாற் பரம்பரை சிஷர்களால் ஆசாரியனுய் மதிக்கப்பட வேண்டிய நல்ல பாக்கியத்தைப்பெறவில்லை. என் தாய்வீட்டார் அநேக வருஷகாலங்களாக உத்தி யோகம் செய்தவர்களாதலால் எனது அம்மானுகிய கஞ்சி-சேஷகிரி ராவ் என்னை வேதபாடசாலைக்கனுப்பாமல் நான் சிறிது எழுதப்படிக்கக் கற்றதும் இங்கிலீஷ் பாடசாலைக்கு அனுப்பினுர். எங்கள் ஊரில் ஒரு பிராமணப்பையன் இங் கிலீஷ் படித்ததால் கிறிஸ்தவனுய்விட்டான். அப்பொழுது என் தகப்பனுர் என்னையும் எங்கள் வம்சத்திற் பிறந்த மற்ற வர்களையும் இங்கிலீஷ் பாடசாலைக்கு அனுப்புவதில்லை யென்று உறுதிசெய்துகொண்டார். எனக்குப் புத்திவரும் வரையில் அவர் உயிரோடிருந்தால் அவர் கொண்ட விரதத்தை நிறைவேற்றியே யிருப்பார். ஆனுல் 'நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கிறது'. நான் சிறுவனு யிருந்தாலும் எங்கள் வழக்கத்துக்கு விரோத மான இங்கிலீஷைப் படிக்க எனக்குச் சிறிதும் பிரியமில்லை. மேலும், என் தகப்பனுர் உயிரோடிருப்பின் என்னை இங் கிலீஷ் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பியிருக்க மாட்டாரே என்னும் எண்ணமும் எனக்கு மனவருத்தத்தை யுண் டாக்கிற்று. இந்த இரண்டு காரணங்களால் இங்கிலீஷ்-படிப்பு எனக்குச் சுத்தமாய்ப் பிடிக்கவில்லை. ஆயினும் இதனுடன் இன்னொரு கஷ்டம். என் அம்மான் பேச்சைக் கேட்டுக்கொண்டு இஙகிலீஷ் பள்ளிக்கூடத்துக்குப் போகச் சொல்லித் தினமும் என் தாயார் தொந்தரைசெய்ய ஆரம் பித்தாள். ஆதலின் நேர் விரோதமான இரண்டு கட் டளைகளுக்கு நான் உட்பட்டவனுனேன். பள்ளிக்கூடத் துக்குப் போனுலோ என் தகப்பனுர் விருப்பத்துக்குப்

பங்கம் நேரிடுகிறது. போகாவிட்டாலோ எனது தாய் இஷ்டத்துக்கு விரோதமாய் நடந்தவனாகிறேன். யார் விருப்பத்தை நான் நிறை வேற்றுவது? என் தகப்பனார் விருப்பப்படியே நடக்கவேண்டுமென்று என் மனச்சாக்ஷி சொன்ன போதிலும் மறுவுலகிலுள்ள என் தகப்பனார் அபிப்பிராயத்தைக் கவனியாது அலக்ஷியம் செய்யக் கூடுவதுபோல் இவ்வுலகில் உயிரோடிருக்கிற எனது அன்னையின் கட்டளையை மீறி நடக்க முடியவில்லை. நமது வேதத்திலோ "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்னும் வாக்கியத்தின் கருத்துக்கொப்பத் தந்தையேயன்றித் தாயும் தெய்வமாகச் சொல்லப்பட்டிருக்கிறாள். ஆகையால் தகப்பனார் கட்டளையை எவ்வாறு மீறி நடக்கக்கூடாதோ, அவ்வாறேதான் தாயின் கட்டளையையும். இவ் விதக் கஷ்டத்தில் நான் கெட்டிக்காரனாயிருந்தமையால் அவர்கள் இருவர் விருப்பத்தையும் நிறை வேற்றி அவர்களுக்கு நான் செய்ய வேண்டிய கடமையினின்றும் தப்ப ஒரு சூழ்ச்சி செய்தேன். அஃது என்னவென்று நீங்கள் கேட்டறிவீர்களானால் எனது அபாரபுத்தியைக்கண்டு சந்தோஷிப்பீர்கள். என் தாயின் கட்டளைப்படி நான் இங்கிலீஷ் பாடசாலைக்குப் போனேன்; என்றாலும் என் தந்தையின் கட்டளைப்படி போகாததுபோலவேயிருந்தேன். உண்மையில் என் பாடத்தைப்படிப்பதில்லை. இவ்வாறாக இரண்டு கட்டளைகளையும் குறைவற நிறை வேற்றினவனானேன்.

நான் இங்கிலீஷ் பாடசாலையில் பத்துவருஷத்துக்கு மேல் படித்தபோதிலும் பெரிய பரீக்ஷை ஒன்றிலும் தேறவில்லை. வெகு கஷ்டத்துடன் ஒரு சிறிய பரீக்ஷையில் தேறிவிட்டேன். நான் வீட்டில் பாடம் படிப்பதில்லையென்பது வாஸ்தவமே. என் உபாத்தியாயர் மிக

உழைப்பாளி யாதலால் சில இங்கிலீஷ் பதங்கள் யென் மனத்தில் ஆழப்பதிந்தன. அவைகளை யென்னால் மறக்கக் கூடவில்லை. ஒருவிசை உள்ளேசென்றதை எளிதில் வெளிப் படுத்தவும் முடியுமோ? முடியாதே! என்றாலும் எனது உபாத்தியாயர் சொல்லிக் கொடுத்தவைகளில், பூகோளமோ, சரித்திரமோ இன்னும் வேறு என்ன இங்கிலீஷ் சாஸ்திரமோ, எவை யெவை நமது சாஸ்திரத்திற்கு விரோதமாய் இருந்தனவோ அவைகளைச் சிறிதும் நம்பாது என்னாற் கூடியவரையில் மறந்தேன். இதன் உண்மை உங்களுக்குப் போகப்போகத் தெரியும். படிப்பினால் புத்தி பலவீனப்பட்டுப் போகிற இக்காலத்துச் சிறுவர்களைப் போலல்லாது, நமது சாஸ்திரங்களிலும் புராணங்களிலும் என் நம்பிக்கை அதனால் அணுவளவுங் குறையவில்லை. இங்கிலீஷ் படித்துக்கொண்டிருக்கையிலேயே ஸ்நாந சந்திய ஜபதபங்கள், வேதமோதுதல், விரதம் உபவாசம் அநுஷ்டித்தல், ஆகிய இவைகளில் வெகு சிரத்தை யுள்ளவனா யிருந்தேன். நான் மந்திர தந்திரங்களைக் குருமுகமாய்க் கற்றுக்கொண்டு சுத்த வைதிகனாயிருந்தேன். எனது ஆசார விவகாரங்களைக் கண்டு எனது அன்னையும் அம்மானும் மிகச் சந்தோஷித்தார்கள்.

நான் நான்காவது வகுப்பிற் படிக்கையில் எனக்கு விவாகமாயிற்று. தெலுங்கு தேசத்தில் எங்கள் வகுப்பார் கொஞ்சம்பே ராதலால் பெண்கள் கிடைப்பது அரிது. ஆகையால் தாழ்ந்த அந்தஸ்துள்ளவர்களிற் கூட ஆயிரம் ரூபாய் கொடுத்தாலொழிய மூன்று வயதுப் பெண்ணுங் கிடைக்காது. ஆனால் என் அம்மான் பலவந்தத்தின் பேரில் ம-ள-ள-ஸ்ரீ. ரிப்பணி. நரசிம்மாச்சாரியர் தனது ஒன்பது வயதுள்ள பெண்ணை ஆயிரம் ரூபாய்க்கு எனக்குப் பாணிக்கிரகணம் செய்து கொடுக்கச் சம்மதித்தார். என் தாயும்

அம்மானும் இப்படிப்பட்ட சமயம் இனிவாய்க்காதென்று எண்ணி எங்கள் பிதிரார்ச்சித நிலத்தை ஈடுகாட்டி மாதத்துக்கு நூற்றுக்கு மூன்றாக வட்டிபேசி, அவர்களுக்குக் கொடுக்க ஆயிரம் ரூபாயும் கல்லியாணச் சிலவுக்காக இருநூறு ரூபாயுங் கடன் வாங்கி, சுக்ல வருஷத்தில் வையாசிமாதத்தில் நல்ல சுபமுகூர்த்தத்தில் என் கல்லியாணத்தை நடத்தினார்கள். எனக்கு அப்பொழுது வயது பதினெட்டு. என் பெண்சாதி அதிக அழகுள்ளவளல்லளாயினும் உண்மையாகவே அவளிடத்தில் நற்குணங்கள் நிறைந்திருந்தன. குல ஸ்திரீகளுக்குக் குணம் பிரதானமேயொழிய அழகு முக்கியமன்றே! கல்லியாணமான ஒரு வருஷத்துக்கெல்லாம் அவளுக்கு அம்மை போட்டியது. அவள் பிழைப்பதரிதென்று எல்லாரும் எண்ணினார்கள். நான் தினமும் ஜபித்து வந்த வீர அநுமானது மந்திர சக்தியால் அவள் மரணத்தினின்றுந் தப்பினாள். ஆயினும் ஒரு கண் மாத்திரம் போய் விட்டது. அவள் முகமுழுமையும் அம்மை வடு நன்றாய்த் தெரிந்தது. முன்னிலும் அதிக அந்தக்கேடாய் விட்டாள். ஆகையால் 'பார்யா ரூபவதி சத்ரு' என்று சொல்பவர்கள் இனி என்னை நிந்திக்க இடமில்லாமற் போய் விட்டது. நான் ஒரு பரீட்சையில் தேறிப் படிப்பைவிடத் தீர்மானித்த பொழுது என் பெண்சாதியும் ப்ரௌடையாய் எங்கள் அகத்துக்கு வந்து விட்டாள். எங்கள் பிதிரார்ச்சித நிலங்களின் வரும்படி நாங்கள் பட்ட கடனின் வட்டிக்கே போதாதிருந்தமையால் எங்கள் சம்சாரத்தைக் காப்பாற்ற வேண்டிய பாரம் என் அம்மான் பேரில் விழுந்தது. இரண்டு சம்சாரத்தை யாதரிப்பது அவருக்குக் கஷ்டமாயிருந்தது. ஆகையால் அவர் விசாகப்பட்டணம்போய் வெகு சிரமத்துடன் சில பெரிய மனிதர் தயை இராசாங்கத்தில் சம்பாதித்து மாதம் 15

ரூபாய்ச் சம்பளமுள்ள ஒரு வேலையை எனக்கு ஏற்பாடு செய்து தந்தார். இதற்குள்ளாக, என் கடன்காரர்கள் என்மேல் வழக்குத் தொடுத்து நான் அவர்களிடத்தில் உண்மையாய் வாங்கினதற்கு இரண்டு மடங்கான தொகைக்கு நியாயஸ்தலத்தில் தீர்ப்பு பெற்று என் சொத்துக்களை விற்பனைக்குக் கொண்டு வந்தார்கள். இவ்விதமாய்ப் பாதிக் கடன் தீர்ந்தது. மறு பாதியைக் கொடுக்க ஒரு வழியும் தோன்றவில்லை. கடன்காரர்கள் தினமும் என் வீட்டைச் சுற்றிக் கொண்டு பலவகையாய் என்னை வருத்தினார்கள். இவ்விதக் கஷ்டங்கள் நான் அநுபவித்துக் கொண்டிருக்கையில் ஊருக்கு ஊர் திரியவேண்டியிருந்த ஓர் உத்தியோகத்தில் என்னை அமர்த்தினார்கள். இந்த உத்தியோகத்துக்குச் சம்பளம் மாதம் ஒன்றுக்கு 20 ரூபாய். ஆனால் இஃது ஊரூராய்ப் போகப் பிரயாணச் செலவுக்கே காணாது. இவ்வாறிருக்க இன்னொரு செலவும் எனக்கு நேரிட்டது. இரகசிய தர்மம் செய்வதில் எனக்கு எப்பொழுதும் பிரியம். ஆனால் அவ்வாறு செய்வது எனக்கு இப்பொழுது நிர்ப்பந்தமாய்ப் போய் விட்டது. அவ்வாறு நான் செய்யாவிட்டால் என் உத்தியோகம் நிலைப்பதாயில்லை. அக்காலத்தில் எங்கள் ஜில்லாவில் லஞ்சம் வாங்குபவர்கள் வெகு ஜாஸ்தி. என் பழைய எஜமானனை மாற்றி விட்டார்கள். அவருக்குப்பதில் புதிதாக வேறொருவர் வந்தார். வெகு கஷ்டப்பட்டு மற்றவர்களை விட நான் அதிகமாய் வேலை செய்த போதிலும் அவர் எப்பொழுதும் என் பேரில் கோபமாய் நான் சரியாய் வேலை செய்வதில்லையென்று சொல்லிக்கொண்டு வந்தார். எனக்கு வேண்டியவர்கள் சொன்ன புத்திமதியைக் கேட்டு அவருக்கு மூன்று தடவை தங்கம் வெகுமதியாக அளித்தேன். எத்தனை விசை அவருக்கு வஸ்திரங்கள் பரிசிலாகத் தந்தேனோ எனக்கு

ஞாபகமில்லை. அவர் குழந்தைக்குப் பால் வேண்டியதா யிருந்ததால் பசுவும் கன்றுமாக விலைக்கு வாங்கி அவருக்கு இரண்டு விசை ஒட்டித்தந்தேன். ஆனால் ஒருவன் தான் செய்த தருமத்தைப் பற்றித் தானே புகழ்ந்து கொள்ள லாகாது. பொதுவாய் இக்காலத்தில் நான் செய்த இரகசிய தர்மம் வெகு அதிகமென்றே சொல்லுவேன். என் சம்பளத்தில் மிகுந்தது தினமும் ஏகாதசி விரதம் இருந்தாற்கூட போதும் போதாததுமாயிருந்தது. சிறிது நாளைக்கெல்லாம் என் பெண்சாதிக்குச் சுரம்வந்தது. தந் வந்திரிக்கு இரண்டாவதென்று எங்கள் கிராமத்தில் பிர சித்தி பெற்ற ஒரு பெரிய வைத்தியர் கட்டளைப்படி 21 நாள் லங்கணம் இருந்து திடீரென்று அவள் இறந்தாள். அந்தப் பெண் மரணத்தோடு இந்த உலகினிடத்தில் எனக்கு விரக்தி உண்டாயிற்று. இஃது இவ்வாறிருக் கக் கடன்காரர்களும் என்னைச் சிறைச்சாலையில் வைக்கப் பிரயத்தினம் செய்தார்கள். இவ்வாறாகிய பலவித கார ணங்களால் சம்சாரம் ஒரு பெரிய காடுபோல் எனக்குத் தோன்ற சம்சார சம்பந்தமான பந்தங்களை நிக்கிரகித்து எல்லாப் பற்றையும் விட்டு முக்தியை நாடும் யோகியாக வேண்டுமென்னு மெண்ணம் எனக்குதித்தது. ஆகையால் என் தாயாரை அவள் உடன்பிறந்தவர் வீட்டுக்கனுப்பி விட்டுக் கடன்காரர்கள் தொந்தரையினின்றுந் தப்பித்துக் கொள்வதற்காக அவ்வூரைவிட்டுத் தென்தேச யாத்திரை செய்யலாமென்னு மெண்ணத்துடன் விசாகப்பட்டணம் சேர்ந்தேன். அப்பொழுது அப்பட்டணத்தில் என் பால்லிய சிநேகர்களில் ஒருவன் என்னைப் பார்த்து என் தெளர்ப் பாக்கியத்தைக் கேட்டு மிகவும் விசனப்பட்டு எனக்கு நூறு ரூபாய் தந்தான். மறுநாள் காலையில் சமுத்திரத்துக் குப்போக, அங்கு அப்பொழுதுதான் ஒரு கப்பல் துறை முகத்துக்கு வரக்கண்டேன். அஃது எவ்விடம் போவ

தென்று விசாரிக்க அங்குள்ளவர்களி லொருவர் சென்னப் பட்டணம் போவதென்று கூறினமையால் சீக்கிரம் போக வேண்டுமென்னு மாசை மேற்பட்டவனும் பொறுக்கமுடியாத கடன்காரர்கள் உபத்திரவத்தினின்றுந் தப்பவேண்டுமென்னும் எண்ணமுள்ளவனுச் சமுத்திரயாத்திரை செய்வது சாஸ்திர விரோதமென்று எனக்குத் தெரிந்திருந்தும் பின்னல் பிராயச்சித்தம் செய்து கொள்ளலாம் என்று எண்ணி ஒரு சாப்பாட்டு விடுதிக்குப்போய்க் காலை போஜனஞ்செய்து வந்து 1879-ம் ஞு மார்கசிர (மார்கழி) மாதம் பானுவாரம் (ஞாயிற்றுக்கிழமை) அன்று ஒருசிறு படவிலேறிப் புகைக் கப்பலிற் போய்ச் சேர்ந்தேன். 27-ம் வருஷத்தில் எனக்கு தேசாந்தர யாத்திரை பலிக்குமென்று என் ஜாதகத்தில் எழுதியிருந்தது. நான் ஏறினதட்சணமே கப்பல் ஓடவாரம்பித்து நான்காம் நாட் காலை என்னைச் சென்னப் பட்டணத்துக்குக் கொண்டுபோய் விட்டது. கப்பல் ஓடுங்கால் கப்பலிலிருக்கும் அவஸ்தை இக்காலத்திற் கப்பற் பிரயாணஞ் செய்யும் அனைவர்க்குந் தெரியுமாதலால் அதைப்பற்றி நான் விவரிப்பது அநாவசியம். சமுத்திரயாத்திரை செய்யாத மஹான்களின் உபயோகத்திற்காக விவரிக்கலாமென்னு மெண்ணம் ஒருவேளை எனக்கிருந்தாலும் கப்பலேறினதுமுதல் மறுபடியும் இறங்கியவரையில் எனக்குத் தேகஸ்மரணை யில்லாதிருந்தது. என் வயிற்றைக் கலக்கி ஏதோ ஒரு விகாரமுண்டாய் அன்று நான் சாப்பிட்ட போஜனத்தோடுகூடக் குழந்தைமுதல் அதுவரையில் என் தேகத்திற் சேர்ந்துவந்த பித்தங்க ளெல்லாம் வாந்தியில் வெளிவந்ததும், தேகம் ஊஞ்சலாடுவது போலிருக்க எழுந்திருக்கவும் சக்தியற்றுக் கண்ணை மூடி ஒரு மூலையில் படுத்துக்கொண்டிருந்ததும் மாத்திரமே என் ஞாபகத்திலிருக்கின்றன. இப்பொழுது வேறொரு சங்கதி என் ஞாபகத்துக்கு வருகிறது. நான் குழந்தையா

யிருந்தபோது தொட்டிலில் அவ்வளவாய்ப் படித்திருந்த தில்லை. கப்பலிலிருந்த மூன்றுநாளும் என் வாழ்நாள் முழுமையும் நான் விரும்புவதற் கதிகமாகவே ஆட்டமுங் குலுக்கலுமா யிருந்தது. அந்தச் சுகம் அநுபவித்தவர் கள் அறியலாமேயொழிய வாயாற் சொல்லக்கூடியதன்று. நான் படவை விட்டிறங்கிய பூமியில் வந்தபிறகுகூட அநேக நாள் தொட்டிலில் ஊஞ்சலாடுவது போலவே பிரம மடைந்திருந்தேன். இந்த மாதிரி ஊஞ்சல் முதலிய கிரீ டானந்தத்தை எனக்குண்டாக்கினவர் எனது முக்கியப் பிராணதேவனே. வாயுதேவரானவர் அவரது பக்தர்க ளில் ஒருவனான நான் தனிமையாய் யாத்திரை செய்வ தைக்கண்டு சகிக்கமுடியாமல் தமது அளவற்ற வல்லமை யைக்காண்பிக்கவேண்டிச் சமுத்திரயாத்திரை முழுமையும் என்னுடன் கூடவே வந்து எனக்கு இந்தக் கிரீடையின் ஆநந்தத்தை யளித்தார். வாயு மகிமையாலுண்டான விகா ரம் வாந்தி இவைகளால் எனக்கு அசௌக்கியம் நேரிட்ட தென்று நீங்கள் ஒருவேளை எண்ணலாம். உண்மையாகவே அஃது எனக்கு நல்ல வைத்தியன்போல உள்ளேயிருந்த கல் மஷங்களைப் போக்கி மிகுந்த ஆரோக்கியத்தை யுண்டாக்கி எனக்குப் பலத்தையும் சுகத்தையுந் தந்தது. நான் கப்ப லிலிருந்த மூன்று தினமும் உபவாசவிரதத்தைப் பூண் டிருந்தே னென்கிற சங்கதி புத்திசாலிகளாகிய நீங்கள் இதுவரையிற் சொன்னதில் ஊகித்திருக்கலாம். என் னதிருஷ்டத்தை யென்னென்று சொல்லுவேன்? அம் மூன்று நாளில் கடைசிதினம் ஏகாதசியாய் வாய்த்ததே! அந்தக் கடைசிநாள் நான் நிராகாரமாய் உபவாசமிருந்ததா லுண்டான புண்ணியத்திற்கு அளவுண்டோ? மற்ற இரண் டு தினங்களில் உபவாசமிருந்த பலன் கப்பல் யாத்திரை செய்ததாலுண்டான பாவத்துக்குச் சரியாய்ப் போய்விட் டாலும் ஹரிதினத்தில் உபவாசமாயிருந்த பலன் எனக்கு

யிருந்திருக்கிற தல்லவா? ஸ்ரீ ஹரியின் கருணைகடாட்ச முள்ளவர்களுக்கு எங்குப் போனாலும் புண்ணியத்துக்குக் குறைவுண்டோ? பின் நடந்த சரித்திரத்தைக் கேளுங்கள் சொல்லுகிறேன்.

---

## அத்தியாயம் 2.

---

நான்காநாள் துவாதசிப்பாரணைக்கநுகூலமாகவே கப்பலும் சென்னைபுரித் துறைமுகத்துக்கு அதிகாலையில் வந்து சேர்ந்தது. கப்பல் லங்கர் போட்டதும் சிறிய படவுகள் அநேகம் அவ்விடம் வர அப்படவுக ளொன்றில் ஏறிக் கரைசேர்ந்தேன். கரையிலிருந்து ஆறுகஜதூரம் நடந்ததும் குதிரைவண்டி ஒன்று கண்ணுக்குத் தென்பட்டது.

'பட்டணத்துக்கு வண்டி கூலிக்குக் கொண்டு வருவாயா' என்று நான் அந்த வண்டிக்காரனைக் கேட்டேன். அவன் ஏதோ தமிழில் சொல்ல அதை நான் அறிந்து கொள்ளமாட்டாமல் "உனக்குத் தெலுங்கு தெரியுமா?" என்று அவனைக் கேட்டேன். அப்பொழுது எங்களிருவருக்கும் கீழே வருமாறு சம்பாஷணை நடந்தது.

வண்டிக்காரன்.—எங்கே போறீங்க.

நான்.—சாப்பாட்டு விடுதிக்கு.

வண்.—எங்கெக்கி?

நான்.—சாப்பாட்டு விடுதிக்கு.

வண்.—தெலுங்கிலே சொல்லு.

நான்.—பூடகூடிபிண்டிகி.

வண்.—பூடகூடி? எனக்கு தெலுங்கு வாராதா?

நான்.—பூடிகூடியிண்டி என்றால் துட்டுவாங்கிக்கொண்டு சாப்பாடு போடுகிற வீடு. அங்கே என்னை யிட்டுக்கொண்டு போகவேண்டும்.

வண்.—துட்டு வாங்கிக்கொண்டு சோறு போடுகிற வீட்டுக்கு உன்னைக் கொண்டுபோய் விடவேண்டுமா?

நான்.—புகைவண்டி யேறுகிற ஸ்டேஷனுக்குச் சமீபமாயுள்ள வீட்டுக்குக்கொண்டுபோ. தெரிகிறதா?

வண்.—தெரிஞ்சுது. முக்கால்ரூபாய். உக்காருங்கோ.

நான்.—முக்கால்ரூபாய் கொடுப்பதோடு இன்னம் உக்காருங்கோ என்ன! பின்னால் சண்டைக்கிடம் வைக்காமல் இப்பவே கூலியைச் சரியாய்ச் சொல்லு.

வண்.—அன்ன சத்திரத்துக்கு அழைத்துக்கொண்டுபோய் விட்டுப்போகிறேன் உட்கார்; முக்கால் ரூபாய் கொடு.

என்று வண்டிக்காரன் மூன்று விரலைக் காண்பித்தான். அவன் பேச்சில் சில எனக்கு அர்த்தமாகாமற் போனபோதிலும் கொடுக்கவேண்டிய பணம் தெளிவாய்த் தெரிந்தமையால் வண்டியில் ஏறி உட்கார்ந்துகொண்டேன். அவன் வண்டியை வீதிவழியாய் ஓட்டிக்கொண்டு போகையில் வீதிக்கிரு பக்கமும் மாட மாளிகைகளும் கூடகோபுரங்களுங் கண்ணைக் கவரத்தக்கவைகளாய்க் களிப்பையுண்டாக்கின. இடையிடையே '———வர் அன்னசத்திரம்' என்று பெரிய எழுத்தால் எழுதப்பட்டு பலகைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. அவைகள் அநேகமிருத்தலைக் கண்டு 'ஒரு தெருவில் இத்தனை அன்னசத்திரங்களிருக்க இப்பட்டணவாசிகள் எவ்வளவு தர்மவான்களோ! என்று ஆச்சரியப்பட்டேன். நான் இவ்வாறு ஆச்சரியப்பட்டுக்கொண்டிருக்கையிலேயே வண்டிக்காரன் 'சுப்பராமய்யர் அன்னசத்திரம்' என்று எழுதியிருந்த விடத்தில் வண்டியை

நிறுத்திக் கதவைத் திறந்து இறங்கென்று சொன்னான். அன்னசத்திரத்துக்கன்று, சாப்பாட்டு விடுதிக்கென்று சொல்லி நான் இறங்காது வண்டியிலேயே உட்கார்ந்து கொண்டிருக்கையில் வண்டிக்காரன் வந்து தன் பாஷையில் நான்கு விசை கூச்சல்போட்டு என் கையைப் பிடித்திழுத்து என் மூட்டையையும் கீழே விட்டெறிந்தான். அந்நிய தேசமாதலால் அவன் என்னை அடிப்பானோ என்னவோ என்கிற பயத்தால் உடனே வண்டியை விட்டிறங்கி முக்கால் ரூபாய் கொடுத்து வண்டிக்காரனை அனுப்பிவிட்டுச் சாப்பாட்டுவிடுதி எங்குளதோ விசாரிப்போம் என்னும் எண்ணத்துடன் உள்ளேபோய் 'இஃது அன்னசத்திரமா?' என்று சமையற்காரப் பிராமணனைக் கேட்டேன். 'ஆமாம், ஒரு வேளைச் சாப்பாட்டுக்குக் கால்ரூபாய்—நாலு அணா' என்று அவன் நான்கு விரலைக் காண்பித்தான். அந்த வார்த்தையில் அன்னசத்திரம் என்பதற்கருத்தம் இன்னதென்று தெரிந்தமையால் மூட்டையைக் கீழேவைத்துவிட்டு 'எனக்குத் துவாதசி பாரணைக்கு மடியாகச் சமையல் செய்து போடுவாயா?' என்று கேட்டேன். 'வேண்டியவளவு சுசியாகச் செய்து போடுகிறே' னென்று அவனும் பதில் சொன்னான். அதன்மேல் 'நான் பிராமணனாய் வைத்துக்கொண்டு கூட போஜனம் செய்ய யாராவது த்ராவிட ப்ராமணன் அகப்படுவார்களா?' என்று நான் அவனைக் கேட்டுக்கொண் டிருக்கும்போது வாசற் றிண்ணையில் உட்கார்ந்து கொண்டிருந்த பிராமணன் ஒருவன் வந்து தான் துவாதசிப் பிராமணனாக வந்ததாய்ச் சொன்னான். நான் அதற்குச் சந்தோஷப்பட்டு ஸ்நானம் செய்து வருவதற்காக வெழுந்து அவன் காண்பித்த குழாய்ஜலத்தில் ஸ்நானம் செய்து ஈரவஸ்திரத்தை யுலர்த்திக் கட்டிக்கொண்டு கப்பல் ஏறின பாவத்தைப் போக்க மடியாகக் காயத்ரீ ஜபித்துப் பழைய பூணூலைக் களைந்து புதிய

பூணூல் போட்டுக்கொண்டு பஞ்ச முத்திரைகளையும் துவாதச புண்டரங்களையுந் தரித்துக் கோவிந்த நாமஸ்ம ரணை செய்துகொண்டு இலையில் உட்கார்ந்தேன். அன்ன சத்திரக்காரனும் இரண்டு இலையிலும் முன்னதாகவே அன் னம் பரிமாறினன். அதற்குப் பிறகு குழம்பு கொணர்ந்து நான் 'பக்கத்தில் பரிமாறு' என்று சொல்லிக்கொண் டிருக் கையிலேயே என் வார்த்தையைக் கேளாமல் அன்னத்தின் மேலேயே அதையும் பரிமாறிப் போனன். அதற்குள் துவா தசி பாரணைக்காக வந்தேனென்று சொன்ன பிராமணன் விபூதி தரித்துக் கொண்டு தான் அதுவரையில் கட்டிக் கொண்டிருந்த வஸ்திரத்துடனேயே வந்து இரண்டாவதிலை முன் உட்கார்ந்துகொண்டான். 'மடிகட்டிக்கொண்டு வாரு மய்யா' என்று நான் சொல்லியும் என் வார்த்தையைச் சிறிதும் இலட்சியம் செய்யாது சிறிதுநேரம் உட்கார்ந்து கொண்டிருந்து எழுந்து வீதிக்குப்போய் அற்பசங்கை செய்துவிட்டுத் திரும்பிவந்து தான் கட்டிக்கொண்டிருந் தது சுத்த மடிவஸ்திரந்தானென்று சொல்லித் தான் முன்பு கட்டிக்கொண்டிருந்த வஸ்திரத்துடனேயே மறுபடியும் உட்கார்ந்துகொண்டான். அப்பொழுது நான் அவன் முகத் தை நன்ருய்ப் பார்க்க விபூதிக் கோடுகள் பதிந்த ஸ்மார்த் த பிராமணனென் றறிந்துகொண்டு விரதபங்க முண்டான தைப் பற்றிச் சிறிது சிந்தித்து எழுந்து போவென்று பொ ருள் கொள்ளத்தக்க வார்த்தை நுனிநாக்கில் வர, அதை அடக்கிக்கொண்டு இலையில் உட்கார்ந்த பிராமணர்களை எழுந்து போகச் சொன்னல் பாவம் வந்து சேருமென்று எண்ணி வாய்திறவாது மௌனமாய் உட்கார்ந்திருந்தேன். ஐயோ! பாபம்! நான் 'த்வைதி' என்று சொன்ன பேர்வை 'அத்வைதி' என்று கேட்டதாக வெண்ணியதால் இவ்வாறு செய்திருக்கலாம்.

‘இதரர்களுக்குப் பரிமாறவேண்டும். சீக்கிரம் பரிஷேசனம் செய்யுங்கள்’ என்று சொல்லிச் சத்திரக்காரன் தொந்தரை செய்தமையால் விதியில்லாமல் அந்தப் பிராமணனுக்கே ஆபோசனம் போட்டேன். எங்கள் சத்திரக்காரன் வெகு பெரியமனுஷ்யன். என் துவாதசி விரதத்துக்குத் தக்கவாறே அகத்திங்கீரை சமைத்திருந்தான். இன்னும் என்னவோ கறி சமைத்திருந்தான் அதன், பெயர் எனக்குத் தெரியாது. அவன் பரிமாறின கறிகளெல்லாம் சாதத்துடன் கலந்து பிசைந்து கொள்ளப் போதாமல் நமது தேசத்தில் ஊறுகாய் பரிமாறும் மாதிரி கொஞ்சங் கொஞ்சமாய்ப் பரிமாறியிருந்தும் கேட்டாலும் இரண்டாந்தரம் பரிமாறவில்லை. பருப்பு வேண்டுமென்று நான் கேட்க, சமைக்கவேயில்லையென்று சொன்னான். நெய் வேண்டுமென்று கேட்டதற்குச் சாதம் பரிமாறின கையோடேயே ஒரு சிறு கிண்ணத்திற் கொணர்ந்து அபிகாரம் (ஒரு துளி வார்த்தல்) செய்துவிட்டுப் போனான். அப்பொழுது எதிற் கலந்து சாப்பிடுகிறதென்று எனக்குத் தோன்றாமல் அதுவரையில் அன்னத்தின்மீது பரிமாறியிருந்த குழம்பிற் சாதத்தைக் கலந்துகொண்டு மிளகு வாசனையால் அதன் ருசி கெட்டுப்போயிருந்தும் கண்களை மூடிக்கொண்டு நான்கு கவளம் விழுங்கினேன். இதற்குள் பரிசாரகப் பிராமணன் குழம்பு குண்டானையுஞ் சோற்றுத் தவலையையும் வாசலுக்குக் கொண்டுபோய் யாரோ சூத்திரர்களுக்குப் போட்டுவிட்டு எங்களுக்குப் பரிமாற மறுபடியுங் கொணர்ந்தான். சூத்திரர்கள் பார்த்த அன்னத்தைப் புசிக்க எனக்கு மனமொப்பாது போய்விட்டாலும் என் துவாதசிப்பிராமணன் மாத்திரம் மறுபடியும் சாதம் போட்டுக்கொண்டு அந்தக் குழம்பிலேயே கலந்துகொண்டு கால்படி அரிசி சாதம் சாப்பிட்டான். தவலையில் அன்னம் மிகக் குறைச்சலாயிருந்தது கண்டு அவ்வளவு அன்னத்தையும்

சூத்திரர்களே தின்றார்களா என்று கேட்டேன். 'இல்லை நீங்கள் ஸ்நாநத்துக்குப் போயிருந்தபோது பிராமணர்களுக்குப் போட்டு ஒரு சின்ன பந்தியாயிற்று' என்று சத்திரக்காரன் சொன்னான். அந்த வார்த்தையைக்கேட்டதும் என் மனம் துடிதுடித்தது. ஏகாதசி உபவாச பலன்களெவ்வளவும் வியர்த்தமாயினவே என்று எவ்வளவோ விசாரத்தை யடைந்தவனானேன். இவ்விஷயங்களைப் பற்றி நான் ஆலோசித்துக்கொண் டிருக்குங் காலையில் சத்திரக்காரன் மிளகுபோட்டுப் புளிகரைத்த தண்ணீரைக் கொதித்துங் கொதிக்காததற்கு முன்னமே ரசமென்று இலையிற்கொண்டு வந்து வார்த்தான். அந்தப் போஜன சௌக்கியத்தைச் சொல்ல என்னால் சாத்தியமில்லை. நான் ஒருவேளை சொன்னாலும் தூரதேசத்திலுள்ள நீங்கள் நன்றாயறிந்து கொள்ள முடியாது போய்விடும். ஆகையால் இதைப் படிப்பவர்களே! எனது சத்தியவந்தத் தன்மையைப் பரீட்சிப்பதற்காக நீங்கள் ஒருமுறை சென்னப்பட்டணம் வந்து 197 ந. கதவிலக்கமுள்ள சுப்பராமய்யர் அன்னசத்திரத்தில் ஒருவேளை போஜனஞ்செய்து அநுபவத்தினாலேயே அடையக்கூடிய அந்த ஆனந்தத்தை ஒருவிசை தப்பாமல் அநுபவித்துப் போங்கள். நான் இப்போது முன்னமேயே சொல்லுகிறேன். பிறகு அன்னத்வேஷம் உண்டாயிற் றென்று மாத்திரம் என்மேல் குற்றங் கூறாதேயுங்கள். உண்மையைப் பரீட்சிக்க விரும்புபவர்கள் இந்த வுலகில் எவ்வளவு வருத்தம் நேரிட்டாலும் அதைப் பொறுமையாய் அநுபவிக்க வேண்டியதுதான்.

போஜனம் முடிந்ததும் எனக்காகவும் அந்தப் பிராமணருக்காகவும்சாப்பாட்டுக்காகக்கொடுக்கவேண்டிய எட்டணாவையும் சத்திரக்காரனிடம் கொடுத்துவிட்டேன். அது தவிர என் பிராமணருக்கு இரண்டணா தட்சிணை கொடுத்து அந்தேசத்திய விசேஷங்களைப்பற்றி விசாரிக்க வாரம்பித்

தேன். 'நீங்கள் எங்குப்போகிறீர்கள்' என்று அந்தப் பிராமணர் என்னைக் கேட்டார். "உடுப்பி சுப்பிரமணியம் முதலிய க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை போகிறேன்" என்று நான் சொன்னேன். அப்பொழுது அந்தப் பிராமணர், எத்தனையோ நீதிகள் கூறித் தன் தேசத்திலுள்ளவர்களெல்லாம் மோசக்காரர்களென்றும், துணையில்லாமல் தனிமையாய்ப் பிரயாணஞ் செய்வது அபாயகரமென்றும், மலையாளதேசத்தில் சித்திர விசித்திரங்கள் எவ்வளவோ வுள்ளனவென்றும், தன்னுடன் வரும்பட்சத்தில் அவைகள் எல்லாவற்றையும் எனக்குக் காண்பித்து மறுபடியும் தான் என்னை க்ஷேமமாய்த் திருப்பிக்கொண்டு சேர்ப்பதாகவுஞ்சொல்லி, என்னை ஒப்புக்கொள்ளும்படிசெய்து பிரயாணமாகப் புகைவண்டியில் அவருடன்கூட ஏறச்செய்தார். நான் வைத்திருந்த நூறு ரூபாயில் புகைக் கப்பல் சார்ஜ் முதலாக அதுவரையில் செலவழிந்த ரூபாய் பதினெட்டும் போக எண்பத்திரண்டு ரூபாய் என் கையில் மிகுந்திருந்தது. அதில் நான்கு ரூபாய் பத்தணா எனக்கும் மற்றொரு நான்குரூபாய் பத்தணா கடனாகத் தமக்கும் ஆக மொத்தம் ரூபாய் ஒன்பதும் அணா இரண்டும் என்னிடமிருந்து வாங்கிக்கொண்டு அந்தப் பிராமணர் தூத்துக்குடிக்கு மூன்றாவது வகுப்பு டிக்கெட்டுகள் இரண்டு வாங்கினார். மறுநாள் காலை 7¼-மணிக்கு நாங்கள் இருவரும் மெயில் வண்டியில் ஏறி எழும்பூரிலிருந்து இருப்புப்பாதை மார்க்கமாகச் சென்றோம். வண்டி புறப்படப் போகும்போது வண்டியில் உட்கார்ந்திருந்த அந்தப் பிராமணர் ராகுகாலம் எப்பொழுதென்று என்னைக் கேட்டார். ராகுகாலமென்றால் என்னவோ எனக்குத் தெரியாதென்று நான் சொன்னேன். ராகுகாலத்தில் பிரயாணம் புறப்படலாகாதென்று அவர் சொன்னார். 'எங்கள்தேசத்தில் ராகுகாலம் பார்ப்பதில்லை. ஆனால் வர்ஜ்ஜகாலத்தில் யாரும் பிரயாணம்செய்

யார்கள்' என்று நான் சொன்னேன். அதற்கு அவர் உங்கள் வடதேசத்தார் அனைவரும் தெரியாதவர்களென்றும் மூடர்களென்றும் சொன்னார். இப்படியிருக்க, வண்டியும் புறப்பட்டுவிட்டது. என்னுடன் வந்த தோழப்பிராமணர் அந்நாட்டை யறிந்த அநுபவமுடையவரா யிருந்தமையாலும், அந்தத் தேசபாஷை யறிந்தவரா யிருந்தமையாலும், வெகு தூரம் யாத்திரை செய்தவராயிருந்தமையாலும், பத்திரமாயிருக்குமென்றெண்ணி என்மூட்டையையும் அவர் பெட்டியிலேயே வைத்தேன். அன்று பகல் 3-மணிக்கு வண்டி கூடலூருக்குப் போய் அங்கு 10-நிமிஷந் தங்கினமையால் நாங்கள் அற்பசங்கைக்குப்போக இறங்கினோம். இதற்குள் ஏறினவண்டியில் நாங்கள் உட்கார்ந்த விடத்தில் வேறு யாரோ புதிதாய்ச் சிலர் வந்து உட்கார்ந்திருந்தார்கள். நாங்கள் மறுபடியும் வந்து உட்கார்ந்து கொண்ட 2-நிமிஷங்களுக்கெல்லாம் வண்டி புறப்பட்டு விட்டது. அப்பொழுது அந்தப் பிராமணர் அவர்களோடு தமிழில் பேச வாரம்பித்தார். அவர்கள் யாரென்று நான் அந்தப் பிராமணரைத் தெலுங்கில் கேட்க, அவர்கள் பறையரென்றும், புகைவண்டியிற் பிரயாணம் செய்பவர்கள் ஆசாரவியவகாரங்களைப் பார்க்க முடியாதென்றும் அந்தப் பிராமணர் எனக்கு இதமாகப் போதனை செய்தார். இந்தப் பிரயாணத்தால் பறையன் கூடவர நேரிட்டதே யென்று நான் விசனப்பட்டு இராத்திரி 6-மணிக்கு மாயவரத்தில் வண்டி 7-நிமிஷந் தங்கியதால் இறங்கி வேறொருவண்டியிற் போய் ஏறியுட்கார்ந்து கொண்டேன். $7\frac{1}{4}$-மணிக்கு வண்டி மறுபடியும் கும்பகோணத்தில் 25-நிமிஷம் நின்ற பொழுது அந்தப் பிராமணர் வண்டியினின்று இறங்கி என்னிடம் ஏதோ தின்பண்டங்களைக் கொண்டு வந்து கொடுக்க, நான் பறைத் தீட்டுள்ளவர்களோடு ஒன்றுந் தின்னேனென்று சொல்ல,

என் பங்குக்கு வந்ததைக் கூட அவரே தின்று தன் வண்டியில் போய் உட்கார்ந்தார். அன்று இராத்திரி மறுபடியும் நாங்கள் ஒருவரை யொருவர் பார்க்கவில்லை. இடம் நெருக்கமா யிருந்தமையாலும் படுக்க இடமில்லாததாலும் எனக்கு நித்திரை சரியாய்ப் பிடிக்கவில்லை. மறுநாள் காலை $5\frac{1}{4}$-மணிக்கு நாங்கள் இருவரும் மலபாதையைப் போக்குவதற்காக மதுரையில் இறங்கினோம். எத்தனை நேரமாகியும் அவர் திரும்பிவரவில்லை. கால் மணிக்கெல்லாம் மறுபடியும் வண்டி புறப்படத் தயாராயிருந்தமையால் அவர் எந்த வண்டியிலாவது அவசரத்தில் ஏறிக் கொண்டிருப்பாரென்று எண்ணி நானும் ஒரு வண்டியில் ஏறிக்கொண்டேன். அன்று 11-மணிக்கு வண்டி தூத்துக்குடி சேர்ந்தது. வண்டிகளின் சமீபம் நின்று எவ்வளவுதான் தேடியும் அந்தப் பிராமண ரிருந்ததாக ஒரு அடையாளமுங் காணவில்லை. பிராமணர் எங்கே தப்பிப்போனாரோ, என்னைக் காணாமல் எவ்வளவு பரிதபிக்கிறாரோ என்று இரண்டு நாள் வரையில் வண்டி வரும்போதெல்லாம் அவரைத் தேடிப் பார்ப்பதற்காகப் புகைவண்டி நிற்குமிடத்திற்கு வந்து தேடிக்கொண்டிருந்தேன். அந்தப் பிராமணர் வரவில்லை. அவரை மதுரையிலேயே திருடர்களடித்தார்களோ, கொஞ்சம் தாமதித்ததால் வண்டி தப்பிப்போயிற்றோ, இன்னும் வேறு என்ன ஆபத்து நேர்ந்ததோ, அப்படி இல்லாவிட்டால் அந்தப் பிராமணர் வராதிருக்கப்பட்டவரல்ல. அவருக்கு மோசவெண்ண மிருக்கும் பட்சத்தில் இராத்திரி எங்கேயோ இருட்டில் இறங்கி ஓடிப்போகாமல் காலை மதுரை வரைக்கும் என்னத்துக்கு வந்தார்? அந்தப் பொருள் எனக்கு இனாமாய்க் கொடுக்கப்பட்டதாகையால் கெட்டுப் போன சொத்து திரும்பிவராது என்று நிராசையை யடைந்த பிறகு திருடர் கையில் பறிகொடாமல் பிரா

மணன் கையி லகப்பட்டமையால் சற்பாத்திர தானபலன் எனக்குக் கிடைத்த தென்று சந்தோஷித்தேன்.

நான் இந்தப் பிராமணனைத் தேடிக் கொண்டிருக்கையில் எனக்குத் தெய்விகமாக ஒரு தெலுங்குப் பிராமணன் தோன்றி என் சங்கதிகளைக் கேட்டு விசாரப்பட்டுத் தன் வீட்டுக் கழைத்துக்கொண்டு போய் எனக்கு ஒரு நாள் சாப்பாடு போட்டு மறுநாள் என்னைத் தன் வண்டியில் ஏற்றி அழைத்துக் கொண்டு போய்ச் சில நாளைக்கெல்லாம் தக்ஷிணமலையாளத்தின் ராஜதானியாகிய திருவனந்தபுரத்தில் சேர்த்தார். அந்தப்பட்டணத்தில் நான் ஒருமாதமிருந்தேன். அப்பட்டணம் சேர்ந்த மறுநாளே எனக்கு அங்கிருந்த ஒரு தெலுங்குதேசப் பிராமண யோகியின் நட்பு உண்டாயிற்று. அவர் நமது பூர்வ ரிஷிகளுக்குச் சமமான மகிமையும் தபோபலத்தையும் பொருந்தியவர். அப்படிப்பட்ட மகானுபாவர்கள் இந்த லோகத்தில் அங்கங்கே இருக்கின்றார்களென்றாலும் அவர்கள் மகத்துவத்தை அறிந்துகொள்பவர்கள் மாத்திரம் அவ்வளவாய் இல்லை. பார்த்தும் பார்க்காததற்கு முன்னமே அவரது மகானுபாவத்வம் ‘ஜாட்டி’ யைப்போல் தொங்கின அவரது தாடியாலே எனக்கு விசதமாய்த் தெரிந்தது. அவருக்குச் சிலநாள் சிச்ருஷை செய்து “நம்மவர்கள் பெண்மலையாளம் என்கிறார்களே, அது எது” என்று நான் அவரை இரகசியமாய்க் கேட்டேன். அவர் முதல் முதலில் மர்மத்தை விட்டுச் சொல்லாமல் “இதுதான் பெண்மலையாள” மென்று மொழிந்தார். நான் புத்திமானாயிருந்தமையால் அவர் வார்த்தையில் நம்பிக்கை வையாமல் “இது பெண்மலையாளமானால் இங்கே புருஷர்களிருக்கின்றார்களோ! பெண்மலையாளத்தில் புருஷர்கள் அபேட்சையில்லாமலே காற்றினால் பிள்ளைகள் பிறக்கிறார்களென்று எங்கள் தேசத்தில் தெரிந்த பெரியவர்கள் நம்பிக்கையாகச்

சொல்லி யிருக்கிறார்கள். அவ்வாறு இங்கு எங்கும் காணப் படவில்லை. பிராமணர்களில் பெண்களுக்குப் ப்ரௌடை யானபிறகு கல்லியாணம் செய்வதும், சூத்திர ஸ்திரீகள் தங்கள் மார்பின் மேல் வஸ்திர மில்லாதிருப்பதும், ஸ்திரீ களில் பலர் விவாகமில்லாமல் தங்களுக் கிஷ்டமானவர் களை வைத்துக்கொண்டு தங்களுக் கிஷ்டமானபோது அவர் களை விட்டு விடுவதும், புருஷர்களுக்குப் பாகமில்லாமல் குடும்ப சொத்துக்களை யெல்லாம் ஸ்திரீகளே அனுபவித்துக் கொண்டிருப்பதும், பெற்ற பிள்ளைகள் ராஜ பட்டத்துக்கு வராமல் கூடப் பிறந்த சகோதரிகளின் குமாரர்கள் பட்டத் துக்கு வந்துகொண்டிருப்பதையுந் தவிர எங்கள் தேசத் துக்கும் இந்தத் தேசத்துக்கும் யாதொரு வித்தியாசமுங் காணப்படவில்லையே. இது பெண்மலையாளமன்று. பெண் மலையாளமெங்குளதோ, அதை நீங்கள் சொல்லாமற்போனால் உங்களை நான் விடமாட்டேன்'' என்று அவர்கால்களில் வி ழுந்து அவைகளைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டேன். இந்தப்பிரகாரம் நான் அவருக்கு விசேஷ பக்தியோடு ஒரு மாதகாலம் சிச்ருஷை (பணிவிடை) செய்துகொண்டுவரும் போது, அவருக்கு என்மீது மிக்க கருணை யுண்டாய் ஒரு நாள் அதிகாலையில் என்னை அவர் 'ஸ்திரீமலையாளத்துக்கு வழி காண்பிக்கிறேன் வா' வென்று பட்டணத்துக்கு வாயு திசையில் இரண்டு குரோச தூரம் அழைத்துக்கொண்டு போய் ஒரு வனத்தில் பிரவேசித்துச் சிறிது தூரம் நடந்து ஒரு சிறு குன்றின்மேலேறி அதனுள் இருக்கின்ற ஒரு குகையைக் காண்பித்து 'பெண்மலையாளத்துக்கு அதுவே வழி; பயப்படாது போம்' என்று சொன்னார். பிராண சிநேகிதர்களான என் தேசத்தவர்களில் யாராவது பெண் மலையாளம் போகவேண்டுமென்று இச்சையுள்ளவர்களிருந் தபட்சத்தில் அவர்கள் வேறு யாரையாவது கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமில்லாமல் அவர்

களுக்கு விசதமாய்த் தெரிவிக்கும்படி, நடந்து கொண்டு போகும்பொழுதே நான் அந்த வழியை அடியால் அளந்து அடையாளங்கள் வைத்துக்கொண்டு பிறகு அவற்றைப் புத்தகத்தில் எழுதிக்கொண்டேன். ஒரு எழுத்தாவது ஏறத்தாழ்வு இல்லாமல் நான் அப்பொழுது எழுதின மாதிரி உங்களுக்கு இப்பொழுது அதைச் சொல்லுகிறேன்; சிரத்தையோடு கேளுங்கள். பட்டணத்துக்கு வெளியிலுள்ள ஒரு பெரிய அரசமரத்திலிருந்து மணலில் மூக்குக்கு நேராக வாயு மூலையில் மூன்று மார்பு தூரம் குறைய முக்கால் குரோச தூரம் நடந்து பிறகு விளாமரத்துக்கருகில் முழங்கை வளைவாய்த் திரும்பவேண்டும். அங்கிருந்து இடதுகைப் பக்கமாக, கால் குரோசம் நடந்து ஒரு சிறிய குன்று மேடு காணப்பட்ட பிறகு வலதுகைப் பக்கந் திரும்பி அந்த வழியே மூன்று முழதூரம் போனால் சிறிய காடு தோன்றும். அந்தக் காட்டில் நுழைந்து வன்னி மரத்துக் கெதிரிலுள்ள கொடிவழியில் இடப்பக்கமாகவும் வலப்பக்கமாகவும் முன்னுக்கும் பின்னுக்கும் பக்கங்களில் வளைந்து வளைந்து போய் அவ்வாறு அரை குரோசம் ஒன்பது மார்பு மூன்று முழம் இரண்டு அடி நான்கு அங்குலம் நடந்து சென்றால் ஒரு குன்று காணப்படும். அந்தக் குன்றின்மேல் மெதுவாகப் பத்தாள் தூரமும் ஒரு மார்பு தூரமும் ஏறி ஒரு மூலையாக மூன்றாள் ஒரு முழ தூரம் இறங்கினால் சிறிய ஈச்சமரங்கள் புதராய்ச் சூழ்ந்துள்ள விடத்தில் குகையொன்று தோன்றும். நீங்கள் இந்த அளவுகளை மறந்துபோய்விட்டீர்களானால் வழி தப்பி அவஸ்தைப்பட வேண்டிவருமாதலால் நீங்கள் சந்தியாவந்தனஞ் செய்யும் மாதிரி பிரதிதினமும் மூன்று காலங்களிலேயும் பாடம்பண்ண வேண்டும். நான் அந்தக் குருவின் உபதேசத்தைப் பகவத்வாக்கியமாக நம்பி, இருட்டு மிக அழகாயிருந்த இந்தக் குகையில் நுழைந்து சிறிது

தூரம் நடந்தபொழுது கால் வழுக்கிக் கீழே விழ ஆரம்பித்தேன். அவ்வாறே ஒரு யோசனை தூரம் விழும்வரையில் உஷ்ணமானது கீழே போகப்போக அவ்வளவுக்கவ்வளவு அதிகமாய்ப் பொறுக்க முடியாதபடி காணப்பட்டது. பிறகு உஷ்ணம் அவ்வளவுக்கவ்வளவு குறைந்து எவ்வளவோ மனோரம்மியமாயிருந்தது. பூமியின் கீழ் ஆழப்போகப்போகப் பூமியில் உஷ்ணம் அவ்வளவுக்கவ்வளவு அதிகமாகிறதென்றும், கொஞ்சம் ஆழம் போனபிறகு அக்கினிமயமாய்ப் பூமியின் மத்தியில் எல்லாவஸ்துக்களும் உருகித் திரவமாயிருக்கிறதென்றும், நான் சிறுவனாய்ப் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருக்கும் பொழுது எங்கள் உபாத்தியாயர் எனக்குச் சொல்லிக் கொடுத்திருந்தாலும், பிரகிருதிசாஸ்திரத்தில் தேர்ந்தவர்களென்று பெருமை பாராட்டும் ஹூணபண்டிதர்கள் சொல்லிக்கொடுத்த சங்கதிகளெல்லாம் பொய்யென்றும், நமது புராணங்களே நிஜமென்றும் எனக்கு அநுபவமாக இப்பொழுது தான் தெரிந்தது. இவ்விஷயத்தில் சந்தேகமுள்ளவர்கள் என்னை வந்து கேட்பார்களாயின் நான் எல்லாவற்றையும் விவரமாய்ச் சொல்லி அவர்கள் சந்தேகத்தை நிவர்த்தி செய்து அனுப்புவேன். நான் வெகு களைப்படைந்திருந்தமையால் அம்மண்ணின்மேல் அப்பொழுது உட்கார்ந்து கொண்டு பின்னால் சாய்ந்தேன். என் படுக்கையிலிருந்து மெதுவாய் நழுவினதாக எனக்கிப்பொழுது தோன்றிற்று. இதுவரையில் நான் என் பிரதியட்ச அநுபவத்தினால் கண்டேன். பிரத்தியட்சப் பிரமாணம் மற்றெல்லாவற்றிலும் விசேஷமானதென்று எல்லா மதஸ்தர்களும் அங்கிகரித்துக் கொண்டிருக்கிறார்களல்லவா? பிறகு எனக்கு நித்திரையுண்டாயிற்று. அந்நித்திரை எத்தனை நாள்கள் இருந்தனவோ அக்காலத்தில் நான் எவ்வெவ்வழி சென்றேனோ எனக்கு அப்பொழுது தெரியவில்லை. நித்திரை

தெளிந்து நான் கண்விழித்துப் பார்த்தபோது நான் ஒரு குகைக்குச் சமீபத்தில் ஒரு பாறுங்கல்லின்மேல் படுத்துக்கொண் டிருந்தேன். சூரியன் அப்பொழுது மேற்கே உதயமாயிருந்தான். இதற்குமுன் நான் சொல்லிவந்த மாதிரி அத்தேசாசாரம் நமது தேசாசாரத்துக்கு முற்றும் வேறாயிருந்தது போலவே அங்கே சூரியன் மேற்கே உதித்துக் கிழக்கே அஸ்தமித்துக்கொண்டிருந்தான். அதுவரையில் எனக்குச் சிறிதும் பசியில்லாதிருந்ததும் என் தேகத்தில் சிறிதும் காயம்படாதிருந்ததும் நான் நித்திரையையடைந்ததும் இவைகளெல்லாம் எனது குருமகத்துவமன்றோ! நான் நித்திரை செய்துகொண்டிருந்தபோது சிறிதும் மதியாது, எழுந்தவுடன் பசியுண்டானது குருகடாட்சமா யில்லாவிடில் வேறு யாது காரணமா யிருக்கலாம்?

---

## அத்தியாயம்-3.

---

நான் தூங்கியெழுந்து கண்திறந்து பார்த்தபொழுது சூரியன் மேற்கே உதயமாய்க்கொண் டிருந்தா னென்று முன் அத்தியாயத்தில் சொல்லியிருந்தே னன்றோ? ஒன்றுந்தெரியாத அந்நியதேசத்தில் கிழக்கு எதுவோ மேற்கு எதுவோ மற்றத் திக்குக்கள் எவையோ சூரியோதயத்தைப் பிடித்து அல்லாமல் வேறு எவ்வாறு அறிந்துகொண்டேனென்று உங்களில் சில புத்திமான்களுக்குச் சந்தேகமுண்டாகக்கூடும். இதைப் படிப்பவர்களுக்கு எந்தவிஷயத்திலும் சிறிதும் சந்தேகங் கூடாதாகையால் நியாயத்துக்கொத்ததாயும் திருப்திகரமாயும் தக்க சமாதானம் இப்பொழுதே சொல்லி அவர்கள் சமுசயத்தை நீக்குகிறேன். "ஸம்சயாத்மா விநச்யதி" 'சந்தேகிப்பவன் நாசமடைவன்' என்கிற பகவத் கீதாப் பிரமாணத்தை நீங்கள் அறிந்திருக்

கிறபடியால் அதை எப்பொழுதும் மனத்திலேயேதியானித்துக்கொண்டு பக்திசிரேஷ்டர்களாகிய நீங்கள் பிரமாணத்துக்குக் கட்டுப்பட்டவர்களாய் என் வாக்கியத்தை வியாச மகருஷியினது வேதவாக்கியமே யென்று மறுவார்த்தையாடாது நம்பி நலமடைய வேண்டுமே யல்லாது நாஸ்திக மூடர்களைப்போல் சந்தேகப்பட்டுப் போகாதேயுங்கள். நான் விழித்துக்கொண்டு கண்ணைத் திறந்து பார்த்தபொழுது முதுகின்மேல் வெட்டவெளியில் மல்லாந்து படுத்திருந்தேன். அப்பொழுது சூரிய பிம்பமானது என் கண்ணுக்கு ஒரு கனிபோல் தோன்றிப் பூமிக்கு ஒரு முழவுயரத்தில் என் இடப்பக்கத்தில் திவ்விய மண்டலத்தில் தங்கக் குடம் போன்று செந்நிறமாய்க் காணப்பட்டது. அது கண்டு நான் முதல்முதலில் சூரியன் அஸ்தமிக்கிற தென்று பிரமித்தேனாயினும் அது கீழே போகாமல் கொஞ்சங் கொஞ்சமாக மேலேசெல்ல ஆரம்பிக்கவே, அது சூரியோதயமே யல்லாது சூரியாஸ்தமன மன்றென்று சிறிது நேரத்துக்கெல்லாம் எனது பிரமிப்பினின்றும் நீங்கித் தெளிந்தேன். கர்மபூமியாகிய இப் பரதகண்டத்தில் கர்ம சிரேஷ்டர்களான பிராமண குலத்தில் சுத்த வைதிகராகிய வியாசராயாசாரிக்குச் சுபுத்திரனும் குலசிரேஷ்டனுமான நான் மறந்து போயாயினும் நித்திரையில்கூட நமது ஆசாரங்களுக்கு மாறாகவும் சாஸ்திரவிரோதமாகவும் வடதிசையில் தலையை வைத்துக்கொண்டு ஒருநாளும் படுக்கேனென்பது நிச்சயம். முன்னாட்களில் வடக்கே தலைவைத்துக்கொண்டு நித்திரை செய்த தோஷத்தினாலல்லவா தலை வெட்டுப் போன விக்கினேசுவரனது முண்டத்தை மறுபடியும் சரிப்படுத்துவதற்காக யானைத்தலை வெட்டுண்டு போயிற்று? ஆகையால், நான் இப்பொழுது தலைவைத்திருந்த திசை தென் திசையாயிருக்கவேண்டுமே யன்றி வடதிசையாயிராது. தெற்கே தலையை வைத்து ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டு

நான் மல்லாந்து படுத்திருந்தபொழுது என் இடப்பக்கம் மேற்குத்திக்கா யிருக்கவேண்டுமாகையால் சாஸ்திரப் பிரமாணத்தால் சூரியன் புறப்பட்டது மேற்குத்திக்கேயன்றிக் கிழக்குத் திக்கன்றென்று உடனே நிச்சயப்படுத்திக்கொண்டேன். இந்தப்பிரகாரமாகச் சிருஷ்டியில் ஒரு அபூர்வமான உண்மை மிக அற்புதமாய் எனக்குத் தோன்றியதற்காக எனக்குள்ளேயே ஆனந்தங்கொண்டு, கண்ணை மூடிக்கொண்டு "ஆ! பகவானே, இந்த அன்னியதேசத்தில் நான் எங்குத் தனிமையாய்ப்போவேன்" என்று ஆலோசித்துக்கொண்டிருக்கையில் சிறிது மப்பு உண்டாய்க் குளிர்காற்று வீசினமையாலும் வழியலுப்பினாலும் எனக்கு நிம்மதியாக நித்திரை யுண்டாயிற்று. அவ்வாறு நான் தூங்கிய பொழுது ஈச்வரானுக்கிரகத்தால் ஒருதிவ்வியமான கனவு கண்டேன். அதில் நான் தரையில் படுத்துக்கொண்டிருந்து வழுக்கினதுமுதல் இங்கு வந்தவரையில் சர்வ விருத்தாந்தங்களையும் நிதர்சனமாக என் கண்ணுறக் கண்டேன். இது விசேஷ இரகசியமானாலும் சிரத்தையுள்ளவர்களான உங்களுக்கு மாத்திரம் சொல்லுகிறேன். நீங்கள் இந்த இரகசியத்தைக் கர்ம பிரஷ்டர்களுக்கும், வேதத் துவேஷிகளுக்கும், நாஸ்திகர்களுக்கும், நம்பிக்கை யில்லாதவர்களுக்கும் சொல்லாது மௌனமாயிருங்கள்.

நான் படுத்துக்கொண்டிருந்த படுக்கை நழுவித் தெற்குப்பக்கமாய்ப் பூமியின் உள்ளுறச் சாயங்காலம் வரையில் கீழே போய்க்கொண்டே யிருந்தது. உங்களில் என்னைப் போலவே பாடசாலையில் தொங்க விட்டிருக்கும் தேசபடத்தைப் பார்த்திருப்பவர்களுக்குத் தலைப்பக்கம் வடதிசையென்றும் அடிப்பக்கம் தென்திசை யென்றும் தெரிந்திருக்கலாம். அப்புறம் இருட்டிப் போனதும் இராத்திரி இரண்டு சாமம் வரைக்கும் பூமியின் உள்ளே மத்தியபாகத்திலுள்ள வாயுமண்டலத்தில் தேவவிமானம் போலப்

பத்துத் திக்குக்களிலும் நூறுயோசனை தூரம் சென்று பிறகு இன்னொரு குகைவாயிலில் நான் அப்படுக்கையோடு கூட இறங்கினேன். அதன்பிறகு என் படுக்கை முன் போலவே வந்தவழியாகவே மேலுக்கு மெதுவாகப் போக ஆரம்பித்தது. அதன் பிறகு கடவுளது மாயையால் படுக்கை திடீரென்று மறைந்து போய்விட்டது. அப்பொழுது நான் அங்கிருந்து முன்போலவே மேலுக்கு நகர ஆரம்பித்தேன். அவ்வாறு சிறிது தூரம் சென்றதும் என் தேகத்தில் பொறுக்கமுடியாத உஷ்ணமுண்டாயிற்று. அந்த உஷ்ணம் மெள்ள மெள்ளக் குறைந்துவந்து நான் ஒரு யோசனை தூரம் சென்றதும் என் காலில் கட்டாந்தரை பட்டது. அத்தரையின்மீது சிறிது தூரம் நடந்து நான் குகையிலிருந்து வெளியேவந்து பூமியின்மேல் இருந்ததென்று நான் முன்சொன்ன பாறையின்மீது படுத்துக்கொண்டிருக்கையில் காலையில் சூரியோதயமாயிற்று. இதற்குள் நான் கனவு நீங்கி மயக்கந்தெளிந்தேன். பெண்மலையாளத்துக்கு இதுவே சரியான வழி. ஓ புத்திமான்களே! இது கனவென்று மயங்கி இதன் உண்மையைக் குறித்து நீங்கள் ஒருவேளை சந்தேகப்படக்கூடும். அவ்வாறு சந்தேகிக்கலாகாது. பிரமாணத்துக்குக் கட்டுப்பட்டவர்களாகிய நீங்கள் இதை இரண்டாம் வேதவாக்கியமாக நம்புங்கள். இந்தக் கனவை என் வேதவாக்கியமாக நம்பவேண்டுமென்று சொல்லுகிறேனே கேளுங்கள். பூர்வ காலத்தில் மந்திர சக்தி பெற்ற நமது மகருஷிகளுக்கு வேதம் பிரத்தியட்சமானதும் இவ்வாறே. அவர்கள் கண்களை மூடிக்கொண்டு பகவானை நினைத்துத் தியானம் செய்து கொண்டிருக்கையில் பகவானது கருணையால் அம்மகானுபாவர்களுக்கு வேதங்கள் சுவப்நம் போலவே வெளிப்படுத்தப்பட்டு சர்வ ஜனங்களுக்கும் விசேஷ பிரமாணமாய் விட்டது. கடவுள் கடாட்சம் அக்காலத்தவர்களுக்கு

மாத்திரமே யன்றி இக்காலத்தவர்களுக்கு இராதென்று நினைக்கக் கூடாது. மகானுபாவர்களாகிய பக்தர்களுக்குப்பகவானது நிர்ஹேதுக கடாக்ஷவெள்ளத்திற்கு ஒருபோதும் குறைவுவராது. ஆகையால், முன்காலம் போலவே கடவுளின் திருவருளால் எனக்கிப்பொழுது தரிசனந் தந்தருளின இந்தக் கடைசி வாக்கியத்தை நீங்களெல்லோரும் வேதப்பிரமாணமாக அங்கீகாரஞ் செய்து கனம்பண்ண வேண்டும். இவற்றைப் பக்திவிசுவாச முள்ளவர்கள் அனைவரும் தப்பாது வேதத்தைப்போலவே நேரிற்கண்ட அநுபவத்தைக் காட்டிலும் அதிகப் பிரமாணமாய்க் கொள்ள வேண்டும். மேலும் நான் முதல் முதல் பூமியின் மீதுள்ள குகையி லிறங்கினது முதல், படுக்கையின்மேல் சாய்ந்து கீழே நழுவினது வரையில், இதனடுவில் நான் விழித்துக்கொண்டிருந்த வரையில் நடந்த வழிப்பிரயாண மனைத்தும், நான் கடைசியில் படுக்கையின்பேரில் மறுபடியும் சாய்ந்துகொண்டது முதல் மேலாகப் பூமியின்மீது வரும் வரைக்கும் நடந்த வழிப்பிரயாணத்துடன்சரியாய் ஒத்துப் போனமையால் என்னுடைய கனவானது அணுவளவும் பிரத்தியக்ஷ விரோத மானதன்று. மேலும் நான் விடியற்காலமாகிய இராத்திரி நான்காம் சாமத்தில் அந்தக்கனவு கண்டமையால் அதிகமாய் நம்பத் தகுந்தது. நான் இப்பொழுது சொல்லி வந்ததெல்லாம் பெண்மலையாளத்திற்குச் சரியான வழி. இந்த அடையாளங்களைப் பிடித்துக்கொண்டு யாரேனும் நிமிஷத்தில் போக உத்தேசித்தால் இரண்டாம்பேர் கண்ணில் படாதபடி மெதுவாகக் கண்ணை மூடிக்கொண்டு போய்விடலாம். அந்தத் தேசபாஷையைக் கற்றுக்கொண்டு பிறகு போகவேண்டுமென்று உத்தேசமிருந்த பட்சத்தில் முன்னதாக என்னிடம வந்து ஆறுமாதம் பணிவிடை செய்யவேண்டும். உங்களை அந்தப் பாஷையில் பண்டிதர்களாக்கி யனுப்புவேன். குருதட்சிணை

உங்களிஷ்டம் எவ்வளவோ அவ்வளவு பின்னால் கொடுக்கலாம். குருதட்சிணையில்லாது கற்றுக்கொண்ட வித்தை பயன்படாதென்று பெரியோர்களிடத்தில் பழக்கப்பட்டுக் கற்றுக்கொண்ட உங்களுக்குத் தெரிந்திருக்கும். நீங்கள் காலணா கார்டு ஒன்று எனக்கு எழுதினால் இப்பொழுது இருப்பிடம் முதலானவைகளை உங்களுக்கு விவரமாய்த் தெரிவிப்பேன். என் பிரயாணக் கதையை இவ்வளவோடு முடித்துவிட்டு இந்தத் தேச விருத்தாந்தங்களைப் பற்றிச் சொல்லத் தொடங்குகிறேன். சாவதானமாய்க் கேளுங்கள்.

அப்பொழுது நான் எழுந்து சிறிதுதூரம் நடந்து ஒரு மரத்தின் நிழலில் உட்கார்ந்துகொண்டு எந்தவழி போகலாமென்று ஆலோசித்துக் கொண்டிருக்கையில் கிழக்குப் பக்கத்திலிருந்து இரண்டு ஆட்களின் உருவங்கள் நானிருக்கும் திக்கை நோக்கி நடந்துவந்தன. அவ்வாறு வந்தவர்கள் புருஷர்களா அல்லது ஸ்திரீகளாயிருப்பார்களோ என்று என் மனத்தில் அப்பொழுது ஒரு பெரிய சந்தேகம் உண்டாயிற்று. அவர்கள் முகத்தைப் பார்க்கச் சற்றேறக்குறைய முப்பது பிராயமுள்ளவர்களாக அவர்கள் காணப்பட்டார்கள். அவர்கள் முகத்தில் தாடியாவது மீசையாவது ஒன்றுமில்லை. இதனால் அவர்கள் அப்பொழுதுதான் க்ஷவரம் செய்து கொண்டார்களென்று நீங்கள் எண்ணக்கூடாது. நமது ஸ்திரீகளுக்குப் போலவே அவர்களுக்கு முகத்தின்மேல் தாடியாவது மீசையாவது பகவானே அருள் செய்யவில்லை. அவர்கள் இருவரும் நீலவர்ண முள்ளவர்களாய் உயரத்தில் என்னைக் காட்டிலும் ஒரு பிடி உயர்ந்திருந்தார்கள். அவர்களிடத்தில் நகைகள் ஒன்றுமில்லை. நெற்றியில் பொட்டு இல்லை. கண்ணில் மையுமில்லை. அவர்கள் இருவரும் ஒரே விதமாக நீண்டு கறுத்த கால் அங்கியும் சிவப்பான உடுப்பும் தலையில் புல்லினால் முடைந்த வெள்ளைக் குல்லாயும் தரித்திருந்தார்கள். கால்களில் இலைகளி

னுல் தைத்த செருப்பைப் போட்டுக்கொண் டிருந்தார்கள். அவர்கள் இடுப்பில் பட்டுக்கச்சைகள் அழுத்தமாய்க் கட்டியிருந்தார்கள். பட்டுக்கச்சைக்கு முன்பக்கத்தில் என்னவோ எழுத்துக்கள் வரையப்பட்டிருந்த பித்தளைத் தட்டைத் தரித்திருந்தார்கள். அவர்கள் கையில் இரண்டு முழ நீளமுள்ள உருண்டைவடிவான பிளந்த வயிரத்தடிகள் இரண்டு இருந்தன. இந்த இலட்சணங்களை யெல்லாம் பார்த்து அவர்கள் யாரோ ராஜசேவகர்ளென்றும் யாரோ அலி (பேடி) களென்றும் அப்பொழுது நிச்சயப்படுத்திக் கொண்டேன். அவர்கள் முதலில் என்னோடு ஒன்றும் பேசாமல், யௌவனமுள்ள அந்நிய ஸ்திரீகள் யாராவது தெருவில் காணப்பட்டால் நமது தேசத்தில் புருஷர்கள் அவர்கள் முகத்தைக் கண்கொட்டாது உற்றுப்பார்க்கிறது போலவே, அவர்கள் என் முகத்தைப் பத்து நிமிஷம் வரையில் கண் கொட்டாது பார்த்து, தங்களுக்குள் என்னவோ கொச கொச வென்று மெதுவாய்ப் பேசிக்கொண்டு பிறகு அவர்களில் ஒருவன் என்னருகில் வந்து "தும் பூபே?" என்று ஏதோ கேள்வி கேட்டமாதிரி சொன்னுன். எனக்கு அந்த வார்த்தை அர்த்தமாகவில்லை. என்றாலும் பெரியமனிதன் ஏதோ கேட்கும்போது பதில் சொல்லாதிருத்தல் தர்மமன்றென்று நினைத்து என்பெயரென்ன வென்று கேட்டிருக்கக்கூடுமென்று ஊகித்துக்கொண்டு தெலுங்கு பாஷையில் "நாபேரு சத்தியராஜாசார்யுலு" என்று சொன்னேன். அவன் கொஞ்சநேரம் ஆலோசித்து மறுபடியும் உரத்த சப்தத்துடன் "தும் பூபே" என்று கேட்டான். நான் அவனுக்குத் தெலுங்குத் தெரியாதென்று அறிந்து கொண்டேன். இந்துஸ்தானி பாஷை எல்லாத் தேசங்களிலுந் தெரிந்திருந்தமல்லவா வென்று, நான் விஜயநகரமகாராஜாவுடன்கூடக் காசிநகரத்துக்குப் போய் வந்தவர்களுடன் பழகினதினுல் பேசக் கற்றுக்கொண்ட அந்தப்

பாஷையில் "மேரா நாம சத்தியராஜாசார்" என்று சொன்னேன். அவன் அந்த வார்த்தையையுந் தெரிந்துகொள்ளாமல் மறுபடியும் " துமி பூபே" என்று பின்னும் உரக்கக் கூப்பிட்டான். அதன்மேல் அவனுக்கு இந்தப் பாஷை தெரியாதுபோயினும் இந்தக் காலத்தில் எங்கும் பரவியிருக்கும் இங்கிலீஷாவது தெரிந்திருக்குமென்று "மை நேம் ஈஸ் ஸத்யராஜாச்சார்ய" என்று சொன்னேன். அவன் அந்தப் பாஷையையுங்கூடத் தெரிந்துகொள்ளாது போனபடியால் கோபத்துடனே முன்போலவே கேட்டான். அதன்மீது எனக்கு ஒன்றும் செய்யத் தோன்றாமல் தேச பாஷைகள் தெரியாது போனாலும் தேவபாஷை தெரியுமோ என்னவோ வென்று சம்ஸ்கிருதத்தில் "அஹம் ஸத்யராஜாசார்ய நாமக விப்ரः" என்று ஸ்பஷ்டமாகச் சொன்னேன். அந்த மூடன் அதையுந் தெரிந்துகொள்ளாமல் தன்னுடன் கூடவந்தவனைக் கூப்பிட்டு ஏதோ பாஷையில் என்னவோ சொன்னான். பிரசித்தமான என்பெயரை அவர்களுக்குத் தெரிவிக்கவேண்டுமென்கிற ஆவலுடனே தமிழ்த் தேசத்துக்குச் சமீபித்திருப்பதால் திராவிடபாஷையாவது தெரிந்திருக்குமோ வென்னவோ வென்று 'என்பேர் சத்தியராஜாசார்' என்று சொன்னேன். இந்தத் தமிழில் தப்பிருந்தால் இதைப்படிக்கும் தமிழர்கள் என்னை மன்னிக்க வேண்டும். நான் முன் ரெயில்வண்டியில் யாத்திரை செய்தபொழுது நான்கு தமிழ் வார்த்தைகள் அந்தப் பிராமணருதவியால கற்றுக்கொண்டேன். ஆகையால் நான் அவர் கையில் கொடுத்திருந்த என் சொத்துக்களைக் குருதட்சிணைக்காகக் கிரகித்துக் கொண்டவாராயிற்று என்று நீங்கள் ஊகித்துக்கொள்ளலாம். அவர்களுக்கு இந்தத் தமிழ்ப் பாஷை வழியே தெரியாது. நான் அப்பொழுது எனது சுயபாஷையாகிய கன்னடத்தில் சொல்லிப் பார்ப்போமென்று "நம்ம——"

என்று ஆரம்பித்தபொழுது அவர்கள் இருவரும் என்னி டம்வந்து எழுந்துவாவென்று என் கையைப்பிடித்து இழுத் தார்கள். அப்பொழுது நான் என் பாஷா பாண்டித்தியத் தைக் காண்பிக்க அதுசமயமல்லவென்று வாயை மூடிக் கொண்டு உங்கள்பின்னேடேயே வருகிறேன், என்னை இழுக் காதேயுங்கள் என்றும், என் ஊா விஜயநகர மென்றும், என்பெயர் சத்யராயாசாரி யென்றும், நான் நற்குலத்தி லுதித்த பிராமண னென்றும் இவைகளையெல்லாம் சைகை செய்து தெரிவித்து ஜிவ்வென்று எழுந்து அவர்களுக்குப் பின்னால் நடந்து செல்ல ஆரம்பிததேன். ஊரையும் பெயரையும் நற்குலத்தையுங் கூட எவ்வாறு சைகை செய்தேனென்று உங்களில் தெரியாதவர்கள் சிலர்க்குச் சந்தேகமுண்டாகுமாதலால் இந்தச் சந்தேகம் நான் சை கை செய்கையில் கவனமாய்ப் பார்த்திருந்தால் மாத்திரம் நிவாரணமாகுமே தவிரச் சொல்லுவதனால் நீங்கமாட்டாது. அந்தராஜபடர்களில் ஒருவன் முன்னே நடந்துபோக, நமது தேசத்தில் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள்பின் ஜனங் கள் போவதுபோல அவன்பின்னால் நான் தலைகுனிந்து கொண்டு நடந்து சென்றேன். மற்றவன் என் பின்னால் நடந்து வந்தான். கொஞ்சத்தூரம் நடந்து சென்றதும் நாங்கள் ஒரு பட்டணத்தின் ராஜவீதியில் நுழைந்தோம். அப்பொழுது அவ்வீதி முழுமையும் ஜனங்கள் காணப்பட் டார்கள். அவர்கள் உடுத்திக்கொண்டிருந்த ஆடைகள் வெவ்வேறு விதமாயிருந்தபோதிலும் அவர்களில் ஒரு வருக்காவது மீசையேனுந் தாடியேனு மில்லை. நரியைப் பரியாகக வல்ல சர்வேசுவரன் அத்தேசத்தில் புருஷர் களுக்கு முகத்தில் மீசையில்லாது ஏன் சிருஷ்டித்தான் என்று போகும்போதே எனக்குள் நானே ஆராய்ந்து கொண்டு போனேன். அச்சமயத்தில் அகஸ்மாத்தாய் எனக்கு இன்றொரு சங்கதி ஞாபகத்துக்கு வந்தது. இது

பெண்மலேயாளமல்லவா, இங்கு புருஷர்கள் எவ்வாறு இருப்பார்கள் என்று என் மனத்தில் தோன்றவே, நான் பார்த்தவர்களெல்லோரும் ஸ்திரீகளே யென்றும், இத்தேசத்தில் புருஷர்களே யில்லே யென்றும், வாயுவுக்கே புத்திரர்கள் பிறப்பார்களென்றும், பெண்மலேயாளத்தைக் குறித்து நம்மவர்கள் சொன்னவையத்தனையும் வாஸ்தவமே யென்றும் நான்நிச்சயப்படுத்திக் கொண்டேன். என் மனத்தில் இந்த ஆலோசனே முடிந்த பொழுது நாங்கள் ஒரு வீடு வந்து சேர்ந்தோம். அந்த வீட்டின் வாசலிலும் உள்ளேயும், என்னே யழைத்துக்கொண்டுவந்தவர்கள் போலவே ஆடைகள் தரித்திருந்த பேடி முகமுள்ள ராஜபடர்கள் அநேக ரிருந்தார்கள். முன்னேய இரண்டு ராஜபடர்களும் என்னே உள்ளே அழைத்துக்கொண்டு போக, உள்ளேயிருந்தவர்களெல்லாரும் கூட்டம் கூட்டமாக வந்து காட்டு மிருகத்தைப் பார்ப்பவர்களேப் போல என்னே ஏற இறங்கப் பார்த்தார்கள். அப்புறம் அவர்கள் தாங்களே ஏதோ ஆலோசனே செய்துகொண்டு என்னேத் தொலேவில் அழைத்துக்கொண்டுபோய் மூலேயில் இருந்த ஒரு கொட்டடி (அறை) யிலடைத்துக் கதவை மூடி விட்டார்கள். அதன் மேல் ராஜபடர்கள் ஒருவர்பின் ஒருவராகக் கதவண்டை வந்து அதில் நெடுக்காகப் போட்டிருக்கின்ற இருப்புக்கம்பிகள் வழியாய்ப்போனி (கூண்டு) லுள்ள காட்டு மிருகத்தைப் பார்ப்பது போல எட்டியெட்டிப் பார்த்துக்கொண்டு என்னிடத்திற்கு வந்துபோய்க்கொண்டிருந்தார்கள். அவர்கள் இவ்வாறு வந்துபோய்க்கொண்டிருப்பதையும் தங்களுக்குள்ளேயே ஏதோ ஆலோசித்துக்கொண்டிருப்பதையும் பார்க்கவே, நமது தேசத்துப் போலீஸ் சேவகர்கள் சங்கதி என் ஞாபகத்துக்கு வர அவர்களுக்கு ஏதோ கெட்ட எண்ணம் உண்டானதாக என் புத்திக்குத் தோன்றிற்று. ஆனல் நான் ஸ்திரீயாயிராது புரு

ஷனாயிருந்ததலால் அவ்வாறு சந்தேகிக்க இடமில்லை யென்
று என் மனதில் சமாதானம் செய்துகொண்டேன். இவ்
வாறாக ராஜாங்க சேவகர்களுக்குள் ஏதோ ஆலோசனை
நடந்துகொண்டிருக்கையில், இதற்குள் அவர்களுடைய எஜ
மானர் அவ்விடம் வந்தார். அவரைத் தூரத்திலிருந்து
பார்த்தே அவர்களனைவரும் தங்கள்தங்க ளிடத்திற்குச்
சென்றார்கள். அதன்பிறகு அங்குத் தன் வேலையை முடித்
துக்கொண்டு, தான் முதலில் வந்தபொழுது என் அறைக்
கெதிரில் சேவகர்கள் கும்புகூடி ஓடிப்போனதைப் பார்த்த
வராதலால் அதில் ஏதோ அதிசயமிருக்கவேண்டு மென்று
ஊகித்து என் அறைக்கருகில் வந்து கதவைத்திறந்து, ராஜ
சேவகர்கள் என்மீது ஏதாவது குற்றஞ் சொல்லுவார்க
ளோவென்று பயந்து நடுநடுங்கிக்கொண்டிருந்த என்
னைப் பார்த்து, ஏதோ சில கேள்விகள் கேட்க நான்
ஒன்றும் பதில் சொல்லாததால் தன் சேவகர்களை ஏதோ
கேட்டுத் தெரிந்துகொண்டு என்னிடத்தில் காரணமின்றி
மேகம்போலப் பொழிந்த கருணையுடையவராய்த் தன்பின்
னால் தன்வீட்டுக்கு என்னை யழைத்துக்கொண்டு போனார்.
ஈசுவரானுக்கிரகத்தால் நான் இவ்வாறு காராகிருகத்தி
(சிறைச்சாலையி) னின்றும் விடுதலைபெற்று நல்லவர் வீட்
டுக்கழைத்துக்கொண்டு போகப்பட்டேன். அவர் தயா
நிதியாயிருந்தமையால் என்னை யாதரித்துத் தன் வீட்டில்
தெருப்பக்கம் எனக்கு ஒரு அறை கொடுத்து நான் நித்தி
ரை செய்ய அவ்வறையில் ஓர் கட்டிலும் போட்டுத் தன்
சேவகனைக்கொண்டு போஜன பதார்த்தங்களை வரவழைத்
து என்முன் வைத்தார். அவர்கள் என்ன ஜாதியோ
எனக்குத்தெரியாது. ஆகையால் அவர்கள்தொட்ட பதார்த்
தத்தைச் சாப்பிட முதலில் எனக்குக் கொஞ்சம் சங்கோச
மாய் (மனமில்லாது) இருந்தாலும் எதுவானாலுஞ் சரி
தின் என்று பசிதேவதையானது என் வயிற்றிலே நுழைந்

து என்னைத் தொந்தரை செய்தமையாலும், அந்தத்தேசத்தில் பிராமணர்கள் இருக்கிறார்களென்பதற்கு அடையாளந்தோன்றாமையாலும், பூர்வகாலத்தில் ஆபத்துச் சமயத்தில் விசுவாமித்திரர் முதலியவர்கள் சண்டாளர்வீட்டிலிருந்து குதிரை மாமிசத்தைத் திருடிக்கொண்டு பசியைத் தீர்த்துக்கொண்டார்களென்று புராணத்தில் படித்திருக்கிறேனாகையாலும், ஜீவனை ரட்சித்தல் விசேஷ தர்மமென்று நமது சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றமையாலும், என் தேசத்திற்குச் சென்றபிறகு பிராயச்சித்தம் செய்துகொண்டு பிராமணசந்தர்ப்பணைகளைச் செய்து பரிசுத்தவானாகலாமென்று அன்றைக்குப் போஜனம் செய்தேன். முதல்நாள் சாப்பிடப் பிடியாததனால் வெகு கொஞ்சந்தான் சாப்பிட்டேன். பிறகு நாளடைவில் கொஞ்சங் கொஞ்சமாக நான் வழக்கப்பட்டுப் போய்விட்டபடியால் விவாகம் நிச்சயமாயிருக்கும் மாப்பிள்ளையைப்போலப் போஜனத்தில் பிரியமுடையவனாய்த் திவ்யபோஜனம் சாப்பிட ஆரம்பித்தேன். என்வீட்டு எசமானியின் பெயர் பாண்டீ பங்கீ. பிராமணர்களிடத்து அவளுக்குப் பக்திசிரத்தை இல்லாமற் போனபோதிலும் இயற்கையாகவே நல்ல இருதயமுள்ளவளாயிருந்தபடியால் எனக்குச் சமஸ்தவுபசாரங்களும் சரியாக நடக்கும்படி செய்து தானாகவே தன்பாஷையை எனக்குக் கொஞ்சங் கொஞ்சமாகக் கற்றுக்கொடுத்து வந்தாள். நான் சுவர், மாடி, உப்பு, பருப்பு, இஞ்சி, வெல்லம், தட்டு, கிண்ணம், பசு, ஆடு முதலியவைகளைக் காண்பித்து அவைகளின் பெயரென்னவென்று சைகை செய்தவுடன், அவள் சொல்லிக்கொண்டு வந்தாள். அப்பெயர்களனைத்தையும் நான் என்னுடன் கொண்டு போன வெள்ளைக் காகித புஸ்தகத்தின்மேல் தெலுங்கிலே எழுதி உருப்போட்டுக்கொண்டு வந்தேன். முதலில் நான் அவ்வார்த்தைகளை எழுதிக்கொண்டிருக்கையில் அவள்

பார்த்து அதிக ஆச்சரியப்பட்டாள். அந்த ஆச்சரியத்தின் காரணத்தை நான் உங்களுக்குப் போகப்போகச் சொல்லுகின்றேன். அந்தப் பாஷையை நாளடைவில் நான் கற்றுக்கொண்டு வந்ததை விவரித்துச் சொன்னால் உங்களுக்கு அருவருப்பா யிருக்கும். அவ்வளவே யொழிய அதனால் உங்களுக்காவது எனக்காவது சிறிதும் பயன் இல்லை. மூன்று மாதம் வெகு கஷ்டப்பட்டுத் தாராளமாய்ப் பேசும்படி அவர்கள் பாஷையைக் கற்றுக்கொண்டேன்.

---

## அத்தியாயம்-4.

---

ஒரு நாள் விடுமுறையன்று போஜனம் செய்து உட்கார்ந்தவுடனே என் எஜமானியாகிய பாண்டீபங்கீ என்னைப் பார்த்து வேடிக்கையாக ‘உன் பெண்சாதி இறந்து போனாளல்லவா’ என்று ரண்டி பாஷையிற் கேட்டாள். அவர்கள் தேசத்தை நாம் பெண்மலையாளம் என்று கூறினபோதிலும் சுதேசத்தவர்கள் அதை ரண்டிநாடென்று சொல்வது வழக்கம். அதனால் அவர்கள் பாஷையும் ரண்டி பாஷை யென்று சொல்லப்படும். என்னை அவள் அந்தக் கேள்வி கேட்டபோதே அவளது அறிவுக்கு நான் அதிக ஆச்சரியப்பட்டு அவளுக்குச் சோதிட சாஸ்திரந் தெரிந்தமையால் இச்சங்கதி யறிந்தாளென்று எண்ணி அந்தச் சாஸ்திரத்தைக் கற்றுக் கொள்ள வேண்டு மென்னும் அவாவுடன் “அம்மா, என் மனைவி வைகுண்டம் சென்ற சங்கதி உமக்கெப்படி தெரிந்தது?” என்று கேட்டேன்.

பாண்டீ.—(புன்னகை செய்து) உன் பெண்சாதி இறந்த சங்கதி மாத்திரமேயல்லாமல் அவள் நீ வெகு சிறுவ

ளுயிருந்த காலத்தில் இறந்தாளென்றும் எனக்குத் தெரியும்.

நான்.—(இது சோதிடசாஸ்திரத்தினலன்று, சாமுத்திரிகா சாஸ்திரத்தினுமலன்று மனதில் எண்ணிக்கொண்டு) அம்மா! எனது முகத்தில் என்ன விசேஷமிருக்கிறது?

பாண்டீ.—உன் மீசையையும் தாடியையும் நீ சிரைத்துவிட்டிருப்பதால் உனது பெண்சாதி இறந்தாளென்று அறிந்துகொண்டேன். உனக்கு மூக்கு இருக்கின்றமையால் உன் பெண்சாதி அதிபால்யத்தில் இறந்திருக்கவேண்டுமென்று அறிந்துகொண்டேன். இதைக்காட்டிலும் உன் முகத்தில் வேறு என்ன விசேஷம் வேண்டும்?

முதலில் இந்த வார்த்தைகளுக்கு எனக்கு அருத்தமாகாமற் போனபோதிலும் பிறகு என் எஜமானியுடன் நெடுநேரம் சம்பாஷணை செய்து அவர்கள் தேசத்தின் நிலைமையைப்பற்றியும் சனங்களது நடையுடை பாவனைகளைப் பற்றியும் சிறிது அறிந்துகொண்டபிறகு அந்த வார்த்தைகளின் அர்த்தம் எனக்குத் தெரிந்து அவர்கள் தேசத்தின் மீது எனக்கு அதிக கோபமுண்டாயிற்று. வலிமையில்லாதவன் தான் கோபங்கொண்டால் பிறர்க்கு அது தீங்கு செய்வதற்குப் பதிலாக அவனையே வந்தடையுமென்று அறிந்து என் கோபத்தை என்மனதிலேயே அடக்கிக்கொள்ள வேண்டியவனாய் விட்டேன். எனக்கு அப்பொழுது அந்தத் தேசத்தை விட்டு ஓடிப்போக வேண்டுமென்னும் புத்தி கூடத் தோன்றியும் பிறர்க்கு அடிமையாயிருந்தமையால் என்னல் அவ்வாறு போகக் கூடுமென்று காணப்படவில்லை. கடவுள் எப்பொழுது யாரை என்ன செய்யச் செய்வரோ, அதை அறியவல்லார் யாவர்?

நான் நெடுநேரம் செய்து கொண்டிருந்த சம்பாஷணையால் எனது எசமானன் அகஸ்மாத்தாய் எசமானியாய்

விட்டார். நான் பார்த்த ராஜபடர்கள் முதலிய புருஷர்க ளனைவரும் ஸ்திரீகளாய்ப் போய் விட்டார்கள். இதுவரை யில் நான் ஊகித்துக் கொண்டிருந்தவாறே ஆயிற்றென் ருலும், இந்தத் தேசத்திற் புருஷர்களே யில்லை யென்றும் காற்றுக்குப் பிள்ளை பிறக்கிறார்க ளென்றும் எண்ணினது பொய்யாய்ப் போய்விட்டது. அத்தேசத்தில் புருஷர்களி ருக்கிறார்களென்றாலும் அவர்கள் இருந்தும் இல்லாதவர்க ளாகவே அவர்களை நாம் நினைக்க வேண்டியதா யிருக்கிறது. அந்த எஜமானர்க ளெல்லாம் ஸ்திரீகளே; அரசாள்பவ ரும் ஸ்திரீகளே; ராஜாங்க உத்தியோகஸ்தர்களும் ஸ்திரீ கள்; மந்திரிகளும் ஸ்திரீகள்; வித்வான்களும் ஸ்திரீகள்; சேனைகளும் ஸ்திரீகள்; பலவாறு சொல்வதேன்? அத்தேச முழுமையும் ஸ்திரீமயமா யிருந்தது. ஸ்திரீகளே சர்வசுதந் திரர். புருஷர்கள் அவர்கள் அடிமைகள். ஆகா! உலகில் இதைவிடத் துரதிருஷ்டம் வேறொன்றிருக்குமா? இச் சங் கதிகளைக்கேட்ட புருஷாபிமானியினது தேகம் படீரென் று வெடித்துப் போகாதா? புருஷர்களிடத்தில் அபிமானம் வைத்துப் புருஷர்களது ஆதிக்யத்தை (சுதந்திரத்தை) ஸ்தா பிப்பதிற் கீர்த்திவகித்த புருஷசிரேஷ்டர்களான ஓ பரத கண்டவாசிகளே! நமது தேசத்திற் புருஷராகப் பிறந்தவர் கள் அத்தனைபேரும் ஆயுதபாணிகளாய்ப் புறப்பட்டு நான் சொன்ன குகைமார்க்கமாக இந்தத் தேசத்துக்குவந்து அநி யாயமாய்ப் புருஷர்கள்மீது அதிகாரத்தைச் செலுத்து கின்ற ஸ்திரீகளெல்லோரையும் கொடிய யுத்தத்தில் ஜயித் து இந்தப் பரிழந்தேசத்திற்கூடப் புருஷர்களது சுதந்தி ரத்தை நிலைநிறுத்துங்கள். இந்த இரகசியங்கள் தெரிந்த நான் துணையிருக்கையில் உங்களுக்குத் தோல்வி எப்பொழு தும் உண்டாகாது. நீங்கள் பயப்படாது போங்கள்.

இவ்விடத்தில் ஸ்திரீகளது எஜமானத்வமென்று சொல் லும் வார்த்தையே தவிர அவர்களிடத்தில் ஒருமைப்பாடு

இல்லே. அவர்களிற் சிலர் புருஷர்களுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுத்து அவர்களுக்குச் சிறிது சுவாதந்திரியமும் கொடுக்கவேண்டு மென்பார்கள். விசேஷத்தொகையுள்ள மற்றவர்கள் புருஷர்களுக்கு எப்பொழுதும் கல்வி கற்பிக்கக் கூடாது என்றும், வித்தை சொல்லிக்கொடுத்தாற் சுயேச்சையுள்ளவர்களாய்க் கெட்டுப்போவார்களென்றும் எண்ணிப் பழைய வழக்கத்தை நிலைநிறுத்தப் பிரயாசைப்படுகிறார்கள். இது சுதேசிகளால் ஆளப்பட்ட நாடு மன்று. துரைத்தனத்தாருக்கும் குடிகளுக்கும் ஒற்றுமையில்லே. அரசாள்பவர்கள் சுதேசிகளேக் காட்டிலும் விசேஷ நாகரிகமுள்ளவர்களாய் இத்தேசத்திற்குத் தெற்கிலுள்ள மலேகளேக் கடந்துவந்து தேசத்தைக் கைப்பற்றினார்கள். இவர்கள் தங்கள் புருஷர்களுக்குக் கல்வி கற்பித்துக் கொஞ்சம் சுதந்திரமுங் கொடுத்து அவர்களேக் கௌரவமாக நடத்துகிறார்கள். அவர்கள் அத்தேசத்திலுள்ள புருஷர்களின் பொருட்டுப் பாடசாலேகளே ஸ்தாபித்துப் புருஷர்கல்வி பரவச் செய்யவேண்டு மென்று முயற்சி செய்கிறார்க ளென்றாலும் கௌரவமுள்ள குடும்பங்களிலிருந்து புருஷப் பிள்ளேகள் எல்லாரும் பள்ளிக்கூடத்திற்குப் போகாததனால் அவர்கள் மனோரதம் அவ்வளவாய் நிறைவேறவில்லே. துரைத்தனத்தார் இப்பொழுது புருஷ உபாத்தியாயர்களேப் பழக்குவதற்காக ராஜதானியில் ஒரு பாடசாலேயைப் புதிதாய் வைத்திருக்கிறார்கள். தேசாசார விரோதமான இப்படிப்பட்ட காரியங்களேச் செய்தமையால் துரைத்தனத்தாருக்கும் சாமான்னிய ஜனங்களுக்கும் பொருத்தம் குறைவா யிருக்கிறது. ஓ இந்துமகாஜனங்களே! இவைகளெல்லாம் உங்கள் வெற்றிக்கு அநுகூலமான அடையாளங்களல்லவா? எனது எஜமானியான பாண்டீபாங்கீ புருஷர்களுக்குக் கல்விகற்றுக் கொடுத்துத் தேசத்திற் சீர்திருத்தங்கள் உண்டாக்கவேண்டு மென்று விரும்பும் கட்சியிற் சேர்ந்தவள். தமது தேசத்திற்

புருஷர்களுக்கு எழுதப்படிக்கத் தெரியாதாகையால், தமது பாஷையிலுள்ள பதங்களை நான் நமது பாஷையில் எழுதிக் கொண்டிருந்ததைப் பார்த்து இதர தேசங்களிற் புருஷர்களுக்கு எழுதப்படிக்கத் தெரிந்திருக்கிறதே! என்று அதிக ஆச்சரியப்பட்டாள். அப்பொழுது அவள் என் பக்கந் திரும்பி "உங்கள் தேசத்தில் நீ போகபுருஷனா" என்று கேட்டாள். இல்லை, நான் குலபுருஷ னென்று பதிற் சொன்னேன். அவள் துரைத்தனத்தார் புதிதாய் வைத்த பாடசாலைக்குப் போக, வயதுவந்த புருஷர்கள் யாரையாவது சம்பாதிக்க வேண்டுமென்று செய்த பிரயத்தனங்களெல்லாம் பயனற்றுப் போய்விட்டமையால், கல்வி கற்பதற்கு ஆவல்கொண்ட என்னைப் பார்த்து, சந்தோஷப்பட்டு என்னை அந்தப் பாடசாலைக் கனுப்பவேண்டுமென்று உத்தேசித்துக் கொண்டாள். அந்தத் தேசபாஷையிற் கொஞ்சம் படித்துத் தேறினவர்களையே அந்தப் பாடசாலையிற் சேர்த்துக்கொள்வார்களாகையால் எனக்கு வீட்டில் தினமும் இரண்டுமணிநேரம் படிப்புச் சொல்லிக் கொடுப்பதற்காகப் பாங்கீபிண்டீ என்னும் பெயருள்ள ஒரு வித்துவ ஸ்திரீயை மாதச்சம்பளத்துக்கு அமர்த்தினாள். 'பிண்டீ' என்னும் பதம் நமதுதேசத்தில் 'சாஸ்திரி' என்னும் பதத்துக்குச் சரியான பொருளுள்ளது. குலபுருஷனுக்கு வித்தை சொல்லித் கொடுத்தாற் பந்துக்கள் எங்கே தன்னைச் சாதிப் பிரஷ்டம் செய்கிறார்களோ வென்கிற பயம் அந்த ஸ்திரீக்கு இருந்தபோதிலும் ஏழைமைத்தனத்தாற் பணத்துக்கு ஆசைப்பட்டும், எனது எஜமானியார் உயர்ந்த சர்க்கார் உத்தியோகத்திலிருந்தமையால் அவரது தயவை வேண்டியும் எனக்குப் பத்நீவிரத கர்மங்களை யுபதேசித்துத் தன் தேசத்தின் பெருமையை எனக்குச் சொல்ல விரும்பியும் அந்தப் பண்டிதை எனக்குப் படிப்புச் சொல்லிக்கொடுக்க ஒப்புக்கொண்டாள். 'பத்நீவிரதம்' என்கிற சொல் உங்கள்

காதிற் பட்டமாத்திரத்தில் ஏதோ விசித்திரமாகத் தோன்றும். அந்தப் பாஷையிற் பெண்சாதிக்குப் பந்தி யென்று பெயர். பந்தி என்னும் பதத்துக்கு எசமானன் என்று அர்த்தம்; கணவனைப் பூதா என்பார்கள். பூதா என்றால் அடியான் என்று அர்த்தம். இந்த இரண்டு பெயர்களைக் கொண்டே அந்தத் தேசத்திற் பர்த்தா பத்நியருக்குள்ள சம்பந்தங்களை நீங்கள் ஊகித்தறிந்துகொள்ளலாம். நமது ஸ்திரீகளுக்குப் பதிவிரதா தர்மம் உபதேசிக்குமாறே அத்தேசத்திற் புருஷர்களுக்குப் பத்நீவிரத தர்மத்தைச் சொல்லிக் கொடுப்பது வழக்கம். எனது உபாத்தியாயை 'பந்தீவேடிபூடி' என்கிற கிரந்தத்திலிருந்து நூறுபாட்டு எனக்குக் கற்றுக்கொடுத்தாள். அந்தப் புத்தகத்தைப் 'பத்நீவிரத தர்மபோதினி' என்று நமது பாஷையிற் சொல்லலாம். அவர்கள் பாஷையில், ஊன்றி யுச்சரிக்கவேண்டிய (ஒத்து) எழுத்துக்கள் அதிகமாயிருக்கின்றன. ஈரசைச்சொற் பதங்கள் அநேகம். ஒவ்வொரு பதமும் 'ஆ'காரத்தையாவது 'ந'காரத்தையாவது ஈறாகக் கொண்டு முடியும். வினைக்களில் 'ஏ'காரம் கடைசியில் வரும். அந்தப் பாஷையின் விஷயம் அப்படி யிருக்கட்டும். பிண்டியார் எனக்குபதேசித்த பாட்டை முதலில் நான் பிரியத்தோடு கற்றுக்கொண்டே னாயினும் அவள் எனக்கு அதன் அருத்தத்தைச் சொன்னதும் இணையில்லாக் கோபம் வந்துவிட்டது. அவள் என்னைவிட்டு வீட்டுக்குப் போனதும் நான் தோட்டத்துக்குப் போய் ஒருவருங் காணாத சமயம்பார்த்து இரகசியமாய் அந்தப் புஸ்தகத்தைக் கொளுத்தி விட்டேன். என்றாலும் இப்பொழுதும் என் கோபம் ஆறவில்லை. அந்தப் பாட்டின் அருத்தத்தை நீங்கள் கேட்டால் என்னைக்காட்டிலும் உங்களுக்கு அதிக கோபம் வரக்கூடும். அந்தக் கோபத்தாலேயாகிலும் நீங்கள் இந்தத் தேசத்துக்கு வந்து இங்குள்ள புருஷர்களை அடிமைத்தனத்தினின்றும் விடுவி

பீர்களென்கிற நம்பிக்கையுடன் அப்பாட்டுக்களிற் சில இப்பொழுது உங்களுக்குத் தெரிவிக்கிறேன். இவைகளை இரத்தினங்களென்று கூறுவது தகாதாயினும் நமது தேச வழக்கப்படி இவைகளை நவரத்தினங்க ளென்றே பெயரிட்டுச் சொல்லுவேன் :

ஸ்ரீசத்தியாராஜாசாரியர் இயற்றிய

## நவரத்தின மஞ்சரி.



1. பாரிடத்துப் புருடனுக்குப் பாரியையே சத்தியமாய்ப்
பரம தெய்வ
மோரிடத்துந் தவறும லவளைவணங் குறுமவனே
யுறுதி யாகச்
சீரிலகு மிம்மையினுஞ் செம்மையுறு மம்மையினுந்
திகழ்ந்து தூய
வாரியென வளர்தருமோ ருவமையிலா மகிழ்வடைந்து
மன்னு வானல்.

2. அநுதினமும் வைகறைப்போழ் தவன்றனது மனைவி
லகலு முன்ன [துயி
ரினிதெழுந்து நதியடைந்து துளைந்துமிகத் தூய்மையுட
னெழிற்கு டத்திற்
புனிதநறு நீரெடுத்துப் போயவடன் பதங்கழுவிப்
போற்றி யன்ன
வனிதையுறு மனத்திருத்தி யப்பதநீர் வாய்க்கொண்டு
மகிழ்தல் வேண்டும்.

3. எவனருமை மனைவியினற் பதநீரை யின்பமுட
னேற்றுட் கொண்டு
நவையில்பல நாளுமிவ ணன்னரொழு குறுநன்மை
நாடி யோங்கு

மவனரிய வினைதொலைத்தின் னமுதமுண்ணு மமரருல
கடைந்து சீர்த்தித்
தவமருவி யெண்ணரிய வுகங்கள்கழி யினுமாண்டுத்
தங்கு வானால்.

4. இத்தகைய பேரின்ப மடையவிரும் புருமவன்ற
னினிமை சான்ற
பத்தினியெத் தகையளெனி னும்பெருநோய் குருடுடை
பங்கு வேனுஞ் [ய
சத்திமுழு தொடுங்கியங்கந் தளர்ந்துடலம்வளைந்தகிழ
தானென் றாலு [ந்
நித்தமவ னுண்டமிச்சி றனையுண்டிவ் வுலகதனி
னிலவு வானால்.

5. எப்புருடன் றன்மனைவி யுண்கலத்தி னெச்சிலைத்தா
னியைந்துண் ணாமற்
றப்பியுளந் தனில்விரும்பா தருவருப்புக்கொள்ளுவனோ
தகையி லன்றோ
னிப்புவியிற் பாவியெனப் பல்லோரு மிகழ்தரநின்
றேங்கிப் பின்னர்ச்
செப்பரிய வுகங்கள்பல வெம்மையுறு தீநரகிற்
றியங்கு வானால்.

6. நன்மனைவி தனைச்சேய்மை கண்டாலு நடுங்கியுள
நாணிக் கூசி
யின்முகத்தி னுடனெழுந்து தனதொருகா னிலத்தூன்
யிருக ரத்தைத் [றி
தன்முடிசேர்த் தொருபுறமாச்சாய்ந்துமிக வுடல்வளைந்
தகவி னோடு [து
மன்மயங்கு குழலாண்மு னமர்தலன்றி யிருத்தலிற்ற
லடாத தன்றே.

7. இந்நிலத்தி லாடவரும் வேசரியுந் தண்டனையின்
றிருப்பா ராகி

னன்னிலைநீங் கிக்கெடுவா ராதலினுற் சற்றேனு
நல்லி ரக்கம்
பன்னியர்தம் மனத்தடையா தன்னேரைப் புடைத்தல [றப்
பண்ப தாகு
மன்னதுங்கிங் கட்கிரண்டு முறையேனுந் தவறுமம
லமைத னன்றே.

8. வைதாலு மடித்தாலு மதிப்பரிய துயரியற்றி
மனக்க லக்கஞ்
செய்தாலுந் திறற்போக புருடர்தமைச் சேர்ந்தாலுஞ்
செம்மை வாய்ந்த
மைதாவுங் குழன்மடவார் தமைத்தெய்வமெனமதித்து
மனத்திற் கோப
மெய்தாமற் பத்தியுட னடிபோற்றி யாடவர்க
ளிசைதல் வேண்டும்.

9. நாரியர்க்குச் சுயேச்சையொன்றே நவிலரிய பூடணமா
நண்ணுமா போற் [ய்
பாரியலும் புருடர்கட்கு நாணமொன்றே பொன்னியன்
பணிய தாகுஞ் [ற.
சூரியசந் திரர்முகமுங் காணுத தூயகுணந்
துதையு நல்லோன்
சீரியவான் கதியடைவான் செய்யவின்பந் திளைத்திடுவா
செப்பி னேமால். [ன்

பிண்டியார் எனக்கு அநேக விஷயங்களைக் குறித்து நீதிகள் சொல்லிக்கொடுத்துக்கொண்டு வந்தாலும் படித்துக் கெட்டுப் போவே னென்கிற பயத்தாற் பிரதிதினமும் அதிக சிரத்தையுடன் சிறிதுந் தவறாது விசேஷமாய்ப் பதிவிரத தர்மத்தைச் சொல்லிக் கொடுத்துக் கொண்டுவந்தார். ஒரு நாள் அந்த வித்வாம்சை நான் கற்றுக்கொண்ட நவரத்னமஞ்சரியில் ஏழாவது ரத்னமான 'இங்கிலத்தி லாட

வரும் வேசரியுந் தண்டனையின் றிருப்பாராகி னன்னிலை நீங்கிக் கெடுவார்' என்கிற மூலபாடத்தை உற்சாகத்துடன் எனக் குபதேசித்து, அந்தத் தண்டனையும் புருஷர்களின் அநுகூலத்திற்காகவே யென்று காரண காரியங்களுடன் அருத்தம் செய்து புருஷர்களைத் தண்டிப்பதனலாய பயனைப் பற்றி விசேஷமாய்ப் பிரசங்கித்துக் கொண்டிருந்தமையால், என் மனத்தில் எழுந்த கோபத்தை நான் வெளியிற் காண்பிக்கக் கூடாதென்று எவ்வளவோ முயன்றும் ஆலகால விஷம் போலுண்டாய்க் கொதித்து வந்த அந்தக் கோபாக்கினியினல் என் கண்கள் சிவந்து கோபத்தை வெளிப்படுத்தினமையால் அசூயையினல் முகத்தை மற்றொரு பக்கந் திருப்பிக் கொண்டேன். அந்த நீதி எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லையென்று புத்திமதியாகிய அவள் அறிந்துகொண்டு, புருஷர்களை ஸ்திரீகள் அடியாமல் ஆதரிக்க வேண்டும் என்று போதிக்கிற இத்தேசத்து நவநாகரிகர்கள்மதம் தனக்கும் சம்மதமாயிருக்கின்றதென்று கூறி, அப்பொழுதே கல்வியால் என் புத்தி மாறுபட்டு நான் கெட்டுப் போகிறேனென்று எனக்காகச் சிறிது விசனப்பட்டு இவ்விஷயத்தைப்பற்றி உங்கள் தேசத்து வழக்கம் என்னவென்று என்னைக் கேட்டாள். "பிராம்மணஸ்ய க்ஷணம் கோபம்" என்னும் நீதிவாக்கியப்படி சாந்தமாகிய நீரினல் எனது கோபாக்கினியை ஒரு நிமிஷத்தில் அவித்து நகைமுகத்துடனே 'எங்கள் தேசத்திற் புருஷர்களே ஸ்திரீகளை யடிப்பார்கள்' என்கிற உண்மையைச் சொன்னேன். நான் வேடிக்கையாகவும் பொய் சொல்லேன் என்பதை அவள் தெரிந்துகொள்ளாமல் நான் பரிகாசஞ் செய்கிறேனென்று எண்ணி என் வார்த்தையை அவள் நம்பவில்லை. இந்த ரண்டி தேசத்தில் நல்லொழுக்கம் நிறைந்த ஸ்திரீகள் தினமுந் தங்கள் புருஷர்களைப் பிரம்பால் அடித்துக் கொண்டிருக்கிறார்கள்

என்று நான் கூறுவதை நீங்கள் நேரிற் காணுதபடியால் அந்தப் பிண்டியார் மாதிரியே நீங்களும் என்னை நம்பமாட்டீர்கள். ஆனால் நான் இங்கு என் கண்ணினல் நேரிற் கண்டதை, வேதவாக்கியம்போலவே உங்களுக்கு நான் உண்மையாய்க் கூறுவதனுற் புராணகதைகளை நம்ப வழக்கப்பட்ட நீங்கள் மாத்திரம் நான் சொல்வதை நம்பாததனுலுண்டாகிற பாவத்துக்கு ஆளாகமாட்டீர்களென்று நான் திடமாய்ச் சொல்லுவேன்.

அவள் என் வார்த்தையை நம்பாமல் இப்படிப்பட்ட விபரீதங்கள் ஈசுவரசிருஷ்டியில் நேரிடா தென்று வாதித்தமையால் என்னுடைய உண்மைத் தன்மையைக் குறித்துச் சந்தேகப்படுவதனுற் சிந்தாக்கிராந்தனுய் என் வார்த்தையின் உண்மையை அவளுக்கு ருசுப்படுத்தவேண்டுமென்று எங்கள் தேசத்திற் புருஷர்கள் ஸ்திரீகளை யடிப்பது இங்கு ஸ்திரீகள் புருஷர்களை அடிப்பது எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மையே யென்றும், வேண்டுமானல் உமக்கு நம்பிக்கை யுண்டாகும்படி எங்கள் சாஸ்திரங்களிலிருந்து வேண்டுமளவு பிரமாண வசனங்களை யெடுத்துக் காண்பிக்கிறேனென்றும் சொல்லி எல்லா ஸ்மிருதிகளிலும் உத்கிருஷ்டமான மநுஸ்மிருதியின் எட்டாவதத்தியாயத்தில் அடியிற் கண்ட சுலோகத்தை வாசித்தேன்.

சுலோ. பார்யா புத்ரச்ச தாஸச்ச சிஷ்யோ ப்ராதாச ஸோதர:
ப்ராப்தாபராதா ஸ்தாட்யா: ஸ்யு ரச்ச்வா பேணுதண் டே [நவா.

சுலோ. ப்ரஷ்டதஸ்து சரீரஸ்ய நோத்தமாங்கே கதஞ்சந
அதோந்யதாது ப்ரஹரந் ப்ராப்த:ஸ்யா ச்சௌாகில்பிஷம்.

அப்பொழுது அவள் இதன் அர்த்த மென்ன வென்று என்னைக் கேட்க, பெண்சாதி, பிள்ளை, சேவகன், மாணாக்கன், சகோதரன் இவர்கள் குற்றம் செய்தால், அப்பொழுது

அவனை அல்லது அவளைக் கயிற்றாலேயாவது மூங்கில் தடி யாலேயாவது அடிக்கவேண்டுமென்பது முதல் சுலோ கத்தின் பொருளென்றும், சரீரத்தின்பின்பாகத்தில் அடிக்க வேண்டுமேயொழியத் தலையின்மீது அடிக்கக்கூடாது, வே றெந்த விடத்திலாவது அடித்தவன் திருடுகிறதனாலுண் டாகும் பாவத்தை அடைகிறானென்பது இரண்டாவது சுலோகத்தின் பொருளென்றும், சொல்லி 'ப்ராப்தாபராத' என்று மூலத்திலிருப்பதனாற் குற்றஞ் செய்வதைப் பார்க்கி லும் அடிப்பதையே முக்கியமாய் வலியுறுத்திச் சொல்லி யிருத்தலால் எங்கள் தேசத்திற் புருஷர்கள் குற்றமில்லா மலே தங்கள் பத்தினிகளை அடிப்பது பரம்பரை வழக்கமாய் விட்டதென்றும், தலையில் அடிக்கக்கூடாதென்றுகூட மூலத் திற் காணப்பட்டாலும் தலைகூடச் சரீரத்தின் ஒரு பாகமா யிருத்தலால் தலைமேற்கூட முன்பாகத்தில் இரண்டு விரல் பிரமாணம் விட்டுப் பின்பக்கத்தில் அடிக்கலாமென்று அந்த வாக்கியத்திற்கு மேற்பொருள் தந்து கட்டளை யேற்படுத்தி, கர்மபூமியான எங்கள் தேசத்திற் பெரியவர்கள் தங்கள் பத்தினிகளைத் தலைமேலே அடிப்பது நல்லவழக்கமென்றும், நான் மனுஸ்மிருதிக்குப் பொருள்செய்து விவரமாய் அதன் கருத்தைச் சொன்னேன். அதன் பேரிற் பிண்டியார் என் னிடமிருந்து இந்த சுலோகங்களையும் சுலோகங்களின் அ ருத்தங்களையும் இரண்டு தரம் கேட்டுக் கண்களை மூடிக் கொண்டு சிறிது நேரம் ஆலோசித்து உன் மோசம் இப் பொழுது தெரிந்ததென்று குதூகலித்து முதற் சுலோகத் திற் 'பார்ய' என்கிற விடத்திற் 'பர்த்தா' வென்றிருக்க வேண்டுமென்றும் புத்திரன், தாசன், சிஷ்யன், ப்ராதா, ஸோதரன் என்று சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிற வர்களெல்லாரும் புருஷர்களாயிருத்தலினால் முதலிற் 'பார் ய' என்று ஒரு ஸ்திரீயிருக்க நேரிடாதென்றும், அதனால் இது கூடப் 'பர்த்தா' என்று இருந்திருப்பதனால் அதை நான்

பரிகாசமாகப் 'பார்ய' என்று மாற்றிப் படித்தேனென்றும் நிர்ணயம் செய்து, அதனோடு சும்மாவிராமற் புருஷர்கள் படித்தால் இவ்வித அநர்த்தங்கள் நேரிடு மென்று அறிந்துகொண்டே புத்திமான்களான எங்கள் பெரியோர்கள் புருஷர் கல்வி கூடாதென்று தீர்மானித்தார்களென்று தன் அபிப்பிராயத்தை வெளியிட்டாள். அங்கு என் பட்சம் வார்த்தை சொல்பவர்கள் யாருமில்லாது போயினமையால் என் தர்க்கத்தின் நியாயத்தை நான் அறிந்திருந்தும் வாக்குவாதம் பயனில்லை யென்று வாய்திறவாதிருக்கவேண்டியவனு யிருந்தேன்.

ஆனாலும் அதனோடு நான் சும்மாவிராமல் நமது தேசத்திற் புருஷர்களே சுதந்திரமுள்ளவர்களென்றும், ஸ்திரீகள் புருஷர்களுக்கு அடிமைப் பட்டிருப்பார்களென்றும், மநுஸ்மிருதியிலிருந்து நான் திருஷ்டாந்தமாகக் கூறின பிரமாணங்கள் உண்மையானவை யென்றும், எப்படியானாலும் அவள் மனதிற் படும்படி செய்யவேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டு பதிவிரதா தர்மத்தைக் குறித்து நமது புராணங்களிலுள்ள அநேக விஷயங்களை அவளுக்குச் சொன்னேன். நான் சொன்னவைகளையெல்லாம் அவள் ஆவலோடு கேட்டு வந்தமையால் எனக்கு மிக உற்சாகமுண்டாய்ப் பதிவிரதாதர்மங்களை அவள் மனதில் நன்றாய்ப் பதியச் செய்ய வேண்டுமென்று பர்த்தாவின் பொருட்டு நாளாயணி கதையைப் பின் வருமாறு சொல்ல ஆரம்பித்தேன்.

"முன்காலத்தில் நாளாயணி யென்று மறுபெயர் வாய்ந்த இந்திரசேனை மௌத்கல்லிய மகர்ஷியை மணந்தாள். அவர் பெருவியாதியால் அவஸ்தைப்பட்டுக்கொண்டிருந்தார். அந்த மகா பதிவிரதை அவர் எச்சிலைத் தினந்தோறும் தேவாமிருதம் போலவே சாப்பிட்டுக் கொண்டு வந்தாள். போஜனஞ் செய்யும் பொழுது ஒரு நாள் அவர்

கட்டை விரல் அறுந்து அன்னத்தில் விழுந்தது. அவ்வாறு விழுந்தும் பதிவிரதா சிரோமணியான அவள் அருவருப்பில்லாமல் அப்பெருவிரலைப் பக்தியோடு அப்புறப் படுத்தி எச்சிலன்னத்தைத் திவ்வியபோஜனமாக உண்டாள். அதைப் பார்த்து——"

இதுவரை சொல்லிவந்த பொழுது அவள் காதுகளைப் பொத்திக்கொண்டு நான் பேசுவதைத் தடுத்துப் புருஷனாகிய நான் இவ்வளவு கதைகள் ஒரு நிமிஷத்தில் உண்டாக்க முடியாதென்றும், நமக்குச் சாஸ்திரங்கள் இருக்கின்றனவென்றும், அவைகளிற் பர்த்ரு சுச்ரூஷை முதலியவை சொல்லப்பட்டிருக்கின்றனவென்றும், கொஞ்சத் தூரம் நம்பினாலும் என் கதையை முடிவு வரையிற் சொல்லவிடாமல் மிக்க கோபங் கொண்டவளாய் நமது சாஸ்திரங்கள் ராக்ஷஸர்கள் செய்த கட்டுக் கதைகள் என்று நிந்தித்தாள். அப்பொழுது நான் கோபத்தை யடக்க முடியாமற் குருவை எதிர்ப்பதனால் வரும் பாபம் வந்தாலும் வரட்டுமென்று எதிர்த்துக்கொண்டு, வார்த்தைக்கு மறுவார்த்தை கூறிச் சிறிதுநேரம் வாக்குவாதம் செய்ய ஆரம்பித்தேன். என்னை நிந்தித்தாலும் நான் சும்மா இருப்பேன். நமது சாஸ்திரங்களை நிந்தித்தபிறகு சாஸ்திரத்துக்குக் கட்டுப்பட்டவனை நான் எவ்வாறு வாயை மூடிக்கொண்டிருக்கலாம்? எங்கள் வாக்குவாதத்தால் அன்றைச் சம்பாஷணை அவ்வளவோடு முடிந்தது. அதனால் நான் சொல்லவேண்டுமென்றிருந்த ஸ்திரீதர்மத்தை அவளுக்குச் சொல்லாது போய்விட்டேனே என்று எனக்கு வருத்தமுண்டாயிற்றே யொழிய நடந்துபோனதைப் பற்றி விசனப்படுவதில் என்ன பிரயோஜனம்? அவள் அன்று எனக்குப்பாடஞ்சொல்லாமற் கோபத்தோடு வீட்டுக்குப் போய்விட்டாள். அவ்வளவோடு என் படிப்புக்கு இடையூறு வருமென்று காணப்பட்டாலும், அவள் நீடித்த கோபமுள்ளவளல்லளானபடி

யாலும் நான் போய் அவளிடத்தில் மன்னிப்புக் கேட்டுக் கொண்டமையாலும் நான்குநாட் சென்றபிறகு முன்போல வே வந்து எனக்கு அவள் மறுபடியும் வித்தை சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தாள். அன்று முதற்கொண்டு நான் அவளுடன் நமது தேசத்தைப் பற்றிப் பேசக் கூடா தென்று ஒட்டிட்டுக் கொண்டேன் (சத்தியஞ் செய்து கொண்டேன்). அதன்பின் நடந்த விருத்தாந்தங்களை மேலத்தியாயத்திற் கூறுவேன்.

---

## அத்தியாயம் - ரு.

---

முன்சொன்னமாதிரி எங்களுக்குள் மனஸ்தாபம் நீங்கி நாங்கள் இருவரும் சமாதானமானபிறகு எங்கள் பிண்டியா ருக்கு என்மீது அளவற்ற தயையுண்டாயிற்று. அவ்வாறு தயையுண்டானதற்குக்காரணம் நான் அவளிடத்தில் விசே ஷபக்தியுள்ளவனாய் நமதுதேசத்திற் குருவுக்குச் சிஷர்கள் சிசுருஷை செய்வதுபோல எல்லாவுபசாரங்களும் செய்து கொண்டு அவளை யநுசரித்துவந்ததனாலேயேதவிர வே றொன்றினாலுமன்று. ஸ்திரீகளாயிருந்தாலும் புருஷர்களா யிருந்தாலும் வித்தை சொல்லிக்கொடுத்தவர்கள் தெய்வத் துக்குச் சமமானவர்களாதலால் நான் ஸ்திரீக்குப்பணி விடைசெய்துகொண்டிருந்தேனென்று நீங்கள் என்னை நிந்தியாமல் என் குருபக்திக்காக என்னை மெச்சிக்கொள்ள வேண்டும். அதன்பிறகு சிஷ்யப்பிரியையாகிய அவள் அத் தேச ஜனங்களின் நடையுடை பாவனை முதலியவைகள் அனைத்தையும்பற்றி எனக்கு மர்மத்தை விட்டுச் சொல் லத்தொடங்கினாள். அவள் ஒருநாட் சாப்பிட்டுவிட்டு உற் சாகமாய்த் தாம்பூலந்தரித்து உட்கார்ந்துகொண்டிருந்த பொழுது நான் அவளிடம்போய்க் குருவாகிய அவளை

வணங்கிக் கைகுவித்துக்கொண்டு அவள் முன்னின்று மரியாதையாய்ப் பின்வருமாறுகேட்டேன்.

‘அம்மா! நீங்கள் எல்லாந்தெரிந்தவர்கள். சுபாவத்திலேயே, புருஷர்கள் அதிக பலமுள்ளவர்களோ ஸ்திரீகள் அதிக பலமுள்ளவர்களோ தயவுசெய்து சொல்லவேண்டும்?

‘புருஷர்களே அதிகபலமுள்ளவர்களென்று அம்மாது சொன்னாள்’. அப்பொழுது எங்களிருவருக்கும் சம்பாஷணை இவ்வாறு நடந்தது:

‘அம்மா! ஸ்திரீபுருஷர்களிற் புருஷர்களே அதிக பலவான்களென்று நீங்கள் சொன்னீர்களல்லவா? அப்படியிருந்தால் இத்தேசத்திற் பலம் அதிகமுள்ள புருஷர்கள் பலவீனர்களான ஸ்திரீகளுக்குட்படும்படி எவ்வாறு சம்பவித்தது? எனக்கு இச்சந்தேகம் நீங்கவேண்டும்.’

‘ஏ! பைத்தியக்காரா! நீ ஒன்றுந்தெரியாத மூடனல்லையா? ஸ்திரீகளுக்குப் புருஷர்கள் உட்பட்டிருக்கவேண்டுமென்பது ஈசுவரனுடைய கட்டளை. (ஈசுவரனென்று ஆண்பால் உபயோகித்ததற்காக இதைப் படிப்பவர்கள் என்னை மன்னிக்கவேண்டும். அத்தேசத்திற் கடவுள் பெண்ணென்றே பிரசித்தம். அம்மாது ஈசுவரி என்று பொருள் கொள்ளும் பெண்பாலையே உபயோகித்தாலும் உங்களுக்குத்தெரியாதென்று நானே ஈசுவரனென்று சொன்னேன்) புருஷர்கள் பலவான்களாயிருப்பதனால் வருத்தப்பட்டுவேலைசெய்யவும் பத்னிக்குச்சேவகம் செய்யவும் தகுந்தவர்கள்; அவ்வளவேயொழிய அவர்கள் ஸ்திரீகளைப்போல ஆலோசனையோடு சேர்ந்த காரியங்களைச் செய்வதற்கும் கிரந்தங்கள் செய்வதற்கும் சுபாவத்தில் தகுந்தவர்களல்லர். புருஷர்கள் அதிக பலமுள்ளவர்களாயிராவிட்டால்’—

எங்கள் தேசத்திற் புருஷர்கள் ஆலோசனையோடு சேர்ந்தகாரியங்களைச்செய்து கவிகளாகவுமிருக்கிறார்களே.

'என் வார்த்தைக்கு இடையூறு செய்யாமல் நான் சொல்வதை அமரிக்கையுடன் கேட்டு உன்சந்தேகத்தைப்போக்கிக்கொள். உங்கள்தேசம் கேவலம் ராக்ஷஸசிருஷ்டி, அதனாற்றான் (நீசொல்வதை நம்பும் பட்சத்தில்) உங்கள் தேசத்திலுள்ளவைகளெல்லாம் தேவதா சிருஷ்டியான எங்கள் தேசத்துக்கு விபரீதமாயிருக்கிறது. அந்த விஷயம் போகட்டும், புருஷர்கள் பலவான்களா யிராவிட்டால் அவர்கள் பத்னிமாருக்குச் சமையல் செய்யவும், உபசாரங்கள் செய்யவும் மூட்டைகள் சுமக்கவும் எவ்வாறு சக்தி யுடையவராவர்?

'எங்கள் தேசத்திற் நளன் பீமன் முதலானவர்களெல்லாம் முன்னாட்களிற் பாகம் செய்வதில் வெகு சமர்த்தர்களாயிருந்தார்கள்'.

'அப்படியிருந்தபட்சத்தில் எங்கள் தேசத்தைப்போலவே உங்கள்தேசமும் பூர்வகாலத்தில் நல்ல நிலைமையிலிருந்து இப்பொழுது கெட்டுப்போயிருக்கும்; ஸ்திரீகள் பலவீனர்களாயிருத்தலால் கடவுள் அவர்களை'—

'அதற்குச் சந்தேகமில்லை. பூர்வகாலத்தைப்போலல்லாமல் எங்கள் தேசம் இப்பொழுது தப்பாமற் கெட்டுப்போய்விட்டது'.

'ஸ்திரீகள் பலவீனர்களா யிருத்தலினாலேயே அவர்கள் கடினமான வேலைசெய்யாமற் சுகமாய் உட்கார்ந்து ஆலோசனை செய்துகொண்டு புருஷர்களைப் பரிபாலனம் செய்யவேண்டுமென்று, கடவுள் உத்தேசித்திருக்கிறார் என்பது உனக்குப்பிரத்தியக்ஷமாய்க் காணப்படவில்லையா? நீ இவ்வளவு கூடத்தெரிந்து கொள்ளாதபட்சத்தில் நீ

படித்த படிப்பால் என்ன பயன்! இதனாலேதான் புருஷர்கள் ஒருவேளை படித்தாலும் புத்தியில் ஸ்திரீகளுக்குச் சமானராகமாட்டார்கள் என்று எங்கள் பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். இப்படிப்பட்ட மந்தபுத்தியிருப்பதனாலேதான் பலவான்களான புருஷர்கள் பலவீனர்களான ஸ்திரீகளுக்கு எப்படி யடங்கியிருக்கிறார்களென்று உனக்குச் சந்தேகமுண்டாயிற்று?

'ஆமாம், அச் சந்தேகத்தைத் தாங்கள் முன்னதாய்த் தீர்த்து என்னைப் புனிதனாகச் செய்யவேண்டும்'.

'ஸ்திரீகள் புத்தியிற் சமர்த்தர்கள், சரீரபலம் எவ்வளவிருப்பினும் புத்தியின் சக்திக்கு ஈடாகாது. அதனாலேதான் புருஷர்கள் ஸ்திரீகளுக்கு அடங்கியிருக்கும்படி நேரிட்டது. கேவலம் சரீரபலமேயுள்ள புருஷர்கள் புத்திபலமுள்ளவர்களான ஸ்திரீகளுக்கு உட்பட்டிருப்பது சுபாவமன்றோ? இந்த அற்பவிஷயங்கூட நீ அறிந்துகொள்ளவில்லையே! இதுவே ஸ்திரீபுத்திக்கும் புருஷபுத்திக்கும் உள்ள தாரதம்மியம். புருஷர்கள் ஸ்திரீகளுக்கு அடங்கியிருக்க இன்னோர் இரகசியம்கூட விருக்கின்றது.

'அந்த இரகசியத்தைக்கூட எனக்குச்சொல்லி மூடனாகிய என்னைக்கிருதார்த்தனாக்கவேண்டும். உனது சிஷ்யனானபிறகு எனக்குத்தெரியாதவிஷயம் இருக்கக்கூடாது'

'அது பரமரகசியமாயிருந்தாலும் பக்திசிரத்தையோடு நீ கேட்கின்றமையால் உனக்கு மர்மத்தைவிட்டுச் சொல்லுகிறேன். ஸ்திரீகள் புருஷர்கள்மேல் அதிகாரத்தைச் செலுத்துவதற்கு முக்கியகாரணம் மந்திரசக்தி; எவ்வளவு பலவானாயிருந்தாலும் அவனை அடக்கி அடிமையாக்கி நாய்போல நடிக்கச்செய்யத்தக்க சக்தி எங்களிடத்துள்ளது.'

'அது வாஸ்தவந்தான், அந்தச் சக்தி ஸ்திரீகளிடத்தில் தப்பாயிருக்கின்றது. சர்வ சுதந்திர முள்ளவர்க ளென்று சொல்லிக்கொண்டிருக்கும் எங்கள் தேசத்திற்கூடப் புருஷர்கள் ஸ்திரீகளுக்கு அடிமைகளாயவர்கள் சொற்படியே நடக்கிறார்கள். சமுசாரத்திற் கர்த்தர்களென்று பெயர் வைத்துக்கொண்டு சபையிற் புலிபோலக்கர்ச்சிக்கின்ற எங்கள் தேசத்திலேயுள்ள நூதன நாகரிகங்களைச்சேர்ந்த புருஷர்களும் கூடத்தங்கள் பௌருஷம் (ஆண்மைத்தனம்) குறைந்தவர்களாய்த் தங்கள் வீட்டிலுள்ள மனையாளுக்கு முன்பு வாயைத்திறவாமற் பூனையைப்போல ஒதுங்கிநின்று தங்கள் சொற்படி பெண்சாதி நடவாததனால் தங்கள்பெண்சாதி சொற்படி தாங்கள் நடந்துகொண்டு வருகிறார்கள்.'

'அப்படியா! இந்த வார்த்தையை இதற்கு முன்னமேயெப்பொழுதாயினும் என்சொல்லவில்லை? உங்கள்தேசத்திற் புருஷர்கள் சுதந்திரர்கள் என்று சொன்னபோது நானென்னவோ வேறுவிதமாய் நினைத்திருந்தேன். இப்பொழுதன்றோ உண்மைதெரிந்தது. முதலிலிருந்தே உன் வார்த்தையில் எப்பொழுதும் எனக்கு நம்பிக்கையில்லை. எங்கள் தேசத்தைப்போலவே உங்கள் தேசத்திலும் புருஷர்களே ஸ்திரீகளுக்கு அடங்கியிருக்கிறார்கள். நானே சுதந்திரனென்று மேலுக்கு யார் எவ்வளவு வேஷம்போட்டுக்கொண்டிருந்தாலும் ஈசுவர சங்கல்பத்துக்கு எப்படியாவது விகற்பம் உண்டாகுமா? இந்த நவநாகரிகர்கள் மூலமாய் எங்கள் தேசம் இப்பொழுது கொஞ்சங்கொஞ்சமாய்க் கெட்டுப்போய்க்கொண்டிருக்கிறது. இக்காலத்துப் புருஷர்களுக்கு முன்னாட்களிலிருந்த ஸ்திரீபக்தி குறைந்துபோய்க்கொண்டிருக்கிறது. ஸ்திரீகள் இப்பொழுது புருஷர்கள் வார்த்தையைக்கேட்க வாரம்பித்தார்கள்.'

கடைசியிற்சொன்ன இந்தவார்த்தைகளால் எனக்குச் சற்று சந்தோஷமுண்டாயிற்று. இதற்குக்கூட ஸ்திரீகள் இப்

பொழுது புருஷர்கள் வார்த்தையைக் கேட்கிறார்களல்லவா? அவ்வாறுகேட்பதே நியாயமாகும். கேட்காததே இயற்கைவிரோதம். இந்தவெண்ணங்களெல்லாம் என்மனத்திலுண்டானாலும் சொன்னால் அவருக்கு மனதுநோகுமென்று நான் வெளியிடவில்லை. இந்தப்பிரசங்கம் நடந்தபிறகு நான் அவருக்குப் பக்தியோடு நமஸ்காரஞ் செய்து எனக்கு அந்த மந்திரத்தைத் தப்பாமல் உபதேசிக்கவேண்டுமென்று இரண்டு காலையும் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டேனே யொழிய எழுந்தவனல்லேன். அப்பொழுது உபதேசிக்கத்தருணமில்லாததினால் மற்றொரு சமயம் உபதேசிக்கிறேனென்று சொல்லிச்சிலநாட்கள் சென்றபிறகு, நான்மூன்று உபவாச (பட்டினி) யிருந்து ஸ்நானஞ்செய்து பரிசுத்தனாய், அமாவாசையன்று அதிகாலையிற்போய் தரிசனஞ்செய்து, தீர்க்கதண்டமாய் நமஸ்காரம் பண்ணினபொழுது எனக்கு அவன் அக்கவசீகர சக்தி மந்திரம் முதலாகிய அநேகமந்திரங்களை உபதேசஞ்செய்தான். அவன் என்னிடம் சொல்லாமற் போனபோதிலும் நான் இந்த மந்திரங்களை நமது தேச ஸ்திரீகளுக்குச் சொல்லிக் கொடுப்பேனென்னும் எண்ணத்துடன் எனக்கு அவன் இவ்வளவுபிரியமாய் உபதேசித்தானென்று நான் அறிந்தேன். இம்மந்திரங்களை இங்குப் பிரசுரஞ்செய்து உங்களுக்கு உபதேசிக்கலாமெனின் பிரசுரம் செய்தபட்சத்தில் ஸ்திரீயர்கூடக் கற்றுக்கொண்டு இந்தத் தேசத்தைப்போலவே நமது தேசத்திலுங்கூடப் புருஷர்களைத் தங்களுக்கு அடிமைகளாகச் செய்வார்களோ வென்கிறபயத்தால் நான் இங்குப்பிரசுரம் செய்யாதுவிட்டேன். ஓ! இந்து மகாஜனங்களே! இதைப் பற்றி உங்களிடத்தில் எனக்குப் பிரீதி இல்லை என்று எண்ணிக்கொள்ளாதேயுங்கள்; என்னிடம் வந்தபட்சத்தில் ஸ்திரீகளுக்குச்சொல்லிக்கொடுப்பதில்லையென்று உங்களிடத்திற் பிரமாணம் வாங்கிக்கொண்டு மந்திர சித்தி யுண்டாவதற்காக

கக் குருதட்சணையும் வாங்கிக்கொண்டு உமக்கொருவர்க்கே எல்லா மந்திரங்களையும் அவைகளைப் பிரயோகிக்கும் வகையையும், அங்கந்யாச கரந்யாசங்களுடனே (கைகளாலும் அங்கங்களாலும் செய்யுந்தந்திரங்கள்) இரகசியமாய் உபதேசிப்பேன்.

அதன்பிறகு நல்லபாண்டித்தியத்தை யடைந்தவனாய் எனது எஜமானிகோரிக்கைப்படி நான் பாடசாலையிற் போய்ச்சேர்ந்தேன். மற்றொருபுருஷன் கூடப் பாடசாலையிற் சேர்ந்து எனக்குப்பள்ளித்தோழனாய் நண்பனானான். நாங்கள் இருவரும் இரகசியமாய் ஆலோசித்துக்கொண்டு அத்தேசத்திலுள்ளபுருஷர்கள் எப்படியாவது சுதந்திரத்தை யடையும்படி எல்லாவிதப் பிரயத்தனங்களும் செய்யவேண்டுமென்று யாருக்குந்தெரியாது ஏதேதோ உறுதிப்பாடுகளைச் செய்துகொண்டோம். ஸ்திரீகளை எளிதில் வசியப்படுத்திக்கொள்ளும் உபாயம் எனக்குத் தெரிந்திருந்தமையால் நம்முடைய கொக்கோக சாஸ்திரத்திற் சொல்லப்பட்ட "ஓம், கிருஷ்ணாங்கி-கிருஷ்ணமுகி-புஷபந்தாஸ்யாமி-வசயமாநயதி - நபவதி - ப்ராஹ்மருத்ரபவதி - ஸ்வாஹா" என்கிற வசீகரமந்திரத்தை அவனுக்குக் குருதட்சணையில்லாமலே உபதேசித்து வெள்ளைப்புஷ்பங்களைமந்திரித்து இதைப்பத்துலக்ஷந்தரம் உருஜெபித்து மறுபடியும் அத்தனை தடவை புனச்சரணம்செய்து ஸ்திரீகளின்மீது போடவேண்டுமென்று சொன்னேன். குருதட்சணைகொடாததனாற் பலிக்கவில்லை! இந்தமந்திரத்தினால் அவ்வளவாக ஒருபிரயோசனமுமடையவில்லை. எப்படியானாலும் நமதுமந்திரங்கள் அந்தத்தேசமந்திரங்களுக்குச் சரியாகமாட்டாது. அதனாலேயே நம்மவர்கள் மலையாளமந்திரமென்று விசேஷமாகச்சொல்லிக்கொள்ளுகிறார்கள். நான் பாடசாலையிற் சேர்ந்ததுமுதல் நடந்த விசேஷங்களைத் தெரிந்துகொள்வதற்குமுன்பாக அத்தேசத்தின் ஆசார வியவகாரங்களைப் பற்றிச் சிறிது சொல்வது யுக்தமென்று கருதிச் சொல்லுகின்றேன்.

அத்தேசத்தில் ஸ்திரீகளே சர்வசுதந்திரர்களென்றும் புருஷர்கள் அவர்கள்கட்டளையை நிறைவேற்றவேண்டியவர்களென்றும் நான் இதுவரையிற் சொல்லிவந்தேன். நமது தேசத்தில் ஸ்திரீகளுக்குப் போலவே அந்தத் தேசத்தில் புருஷர்களுக்குக்கல்வி கற்பியார்கள். நமது தேசத்திலுள்ள போகமாதர் (நடனமாதர்) போலவே அந்தத்தேசத்திலும் போகபுருஷர்கள் (நடனபுருஷர்கள்) மாத்திரம் சிறிது கல்வி கற்பார்களாதலால் அது அவர்கள் தொழிலுக்கு அநுகூலமாயிருக்கும். புருஷர்களைப் படிக்கச்சொன்னால் அவர்கள் அதைப்பெரிய குற்றமாகநினைத்துக் கோபமுள்ளவர்களாய்க் கொடுமையான பாவத்தைச்செய்யச் சொல்பவனைத் திட்டும்மாதிரி திட்டுவார்கள். கல்வியில்லாதுபோனதாலோ வேறெக்காரணத்தாலோ அந்தத்தேசத்திலுள்ள புருஷர்களுக்கு நமதுதேசத்து ஸ்திரீகளைக்காட்டிலும் நகையில் அதிகப்பிரியம். அங்கு ஸ்திரீகளிடத்தில் ஆபரணங்கள் அவ்வளவாயிராது. நகைதரிப்பதற்காகவல்லவோ புருஷர்களுக்கு மீசையுந் தாடியும் பகவான் ஏன் கொடுத்திருக்கிறார் என்று அங்குள்ளவர்கள் கேட்பார்கள். இதைப்பற்றியே அங்குள்ள புருஷர்கள் தலைமயிரைச் செம்மையாய்ச் சீவிக் கோதி முடிப்பதோடு மீசையையுந் தாடியையுங் கூடச் சீவி நகையை அணிந்து கொள்கிறார்களென்று நான் சொல்லாமலே உங்களுக்கு விளங்கும். பெண்சாதி இறந்துபோன புருஷர்களுக்கு அங்குள்ளவர்கள் மீசையையுந் தாடியையும் எடுத்துவிடுவார்கள். அவ்வளவேயொழிய நமது தேசத்து கைம்பெண்களுக்குச் செய்யும் மாதிரி தலைமொட்டையடிப்பதில்லை. தாரமிழந்தவர்களுக்குத் தாடியை எடுத்தும் தலையை ஏன் மொட்டை அடிப்பதில்லையென்று என் சிநேகிதரை நான் ஒருநாள் கேட்க அவர் புருஷர்கள் ஸ்திரீகளுக்கு எப்பொழுதும் அடங்கியிருக்கவேண்டியவர்களாதலால் அவர்களைச் சிங்காரிக்க வேண்டியவர்கள் பின்னுங் குடு

மியைப்பிடித்துக்கொண்டு அவர்கள்முதுகில் முட்டியாற் குத்த அநுகூலமாயிருப்பதுபற்றித்தலைமயிரை எடுப்பதில்லையென்று அவள்சொன்னாள். அந்தத்தேசத்தில் இன்னொரு விசித்திரமான ஆசாரமுளது. இருபது வருஷங்களுக்கப்புறம் தாரத்தையிழந்த கணவர்கள் அனைவருக்கும் 12-ம் நாள் மூக்கின் நுனியைக் கத்தரித்துவிடுவார்கள். இவ்வழக்கத்தைப்பற்றியே முன்னால் என்னெஜமானியாகிய பாண்டிபங்கியார் என் பெண்சாதி நான் சிறுவனாயிருந்தபொழுது இறந்ததாகவறிந்தார். மூக்குக்கத்தரிகள் ஒவ்வொருவீட்டிலும் ஒவ்வொன்றிருந்தது. நமதுதேசத்தில் இந்தநல்வழக்கத்தை நிலைநிறுத்தவேண்டுமென்று ஒருகத்தரி சம்பாதித்து நான்வரும்போதுகொண்டுவந்தேன். தநபத்தினாலோ வேறு எதனாலேயோ இந்த மூக்கறுப்பட்ட புருஷர்களிடத்திற் சிறிதேனும் விபசாரம் காணப்படுவதில்லை. அவ்வாறு விபசாரம் இல்லாததற்கு இந்த மூக்கறுபடுதலே காரணமென்பதற்குச் சந்தேகமில்லை. புருஷர்களுக்குச் செய்வதனால் இது துர்வழக்கமா யிருந்தபோதிலும் ஸ்திரீகள் விஷயத்தில் இவ்வாறு செய்தால் தப்பாது நல்வழக்கமே யாகும். நமது விதவைகளுக்கு இவ்வாறு மூக்கறுத்த பட்சத்தில் அவர்களிடத்தில் விபசாரம் முற்றும் நசித்து (அற்று)ப் போகுமென்பதற்குச் சந்தேகமேயில்லை. இப்படிப்பட்ட நல்லவழக்கத்தை நமது ஸ்மிருதியில் எங்கேயாவதுசொல்லாதிராது; ஆதலால் இந்தவழக்கத்தைத் தப்பாது நாம் நமதுதேசத்தில் நிலைப்படுத்தவேண்டும். இப்பொழுதுள்ள ஸ்மிருதிகளில் ஒருவேளை இதற்கு ஆதாரம்இல்லாதுபோய் விட்டாலும் (இழந்து) கெட்டுப் போயுள்ள ஸ்மிருதிகளிலாவது இருக்குமேயொழிய இராமற்போகாது. தர்மவான்களுடைய கொள்கையும் பிரமாணமேயாதலால் நமதுபண்டிதர்கள் எல்லோரும் உடனே சபைகூடி இப்படிப்பட்ட கட்டளையொன்றைக் கூடியசீக்கிரத்திலேயே பிறப்பிக்க வேண்டும்.

அத்தேசத்திற் கூட நமதுதேசத்தைப்போலவே பத்தினிகள், வயதில் சிறியவர்களாயும் பர்த்தாக்கள் பெரியவர்களாயு மிருப்பார்கள். இஷ்டமிருந்தால் ஒருஸ்திரீ அநேக பர்த்தாக்களை விவாகஞ்செய்துகொள்ளலாமென்றாலும் சமஸ்தானத்துப் பிரபுக்கள் தவிரச் சாதாரணமாய் ஸ்திரீகள் ஒவ்வொரு பர்த்தாவுடனேயே திருப்தியடைவார்கள். பர்த்தாக்கள் பிறந்தகத்துக்குப்போயிருக்கும்பொழுதும்வியாதியால் அசக்தர்களாயிருக்கும்பொழுதும் ஸ்திரீகளில் அதிக காமியாயிருப்பவர்கள் போகபுருஷர் வீட்டுக்குப்போவார்கள். மேற்சொல்லிய காரணங்க ளிரண்டு மில்லாவிடினும் தனவதிகளாகிய ஸ்திரீகள் போகபுருஷர்களை வைத்துக்கொண்டிருப்பார்கள். இந்தப் போக புருஷர்கள் சிறுவயது முதல்ஸ்திரீகளை மயக்கிச்சைகைசெய்து தம் வயப்படுத்திக் கொள்ள வேண்டிய வழிகளை யெல்லாம் இளமையிலேயே கற்றுக்கொள்வார்கள். மனதுக்கு ரம்மியமான சங்கீதம் அவர்க ளிடத்திலேயேயிருந்தமையால் சங்கீதம்பாடக் கற்றுக்கொண்ட புருஷர்களும் ஸ்திரீகளும் மிக்க இழிவாக வெண்ணப்படுவார்கள். சங்கீதவிருத்தியை (பாடுந்தொழிலை) யுடைய ஸ்திரீகளுடன் பந்திபோஜனம் செய்யார்கள். காமத்தை யதிகரித்துக் கேட்க இன்பமாயிருக்கும்பாட்டுக்கள், சரசவார்த்தைகள், வசியமருந்துகள், வசீகரண மந்திரங்கள், பலவித பாவனைகளைத் தெரிவிக்கும் கைச்சைகை கண்சைகைமுதலிய அபிநயங்கள் இவைகளைக் கற்றுக்கொண்டு போகபுருஷர்கள் தாடியையும் மீசையையும் தலைமயிரையுஞ்சிவிக்கோதி நாநாவிதமான ஆபரணங்களாலும் புஷ்பங்களாலுந் தங்கள் சரீரத்தை யலங்கரித்துக்கொண்டும், சித்ரவர்ணமுள்ள வஸ்திரங்களை தரித்துக்கொண்டும், முகத்தில் பிலுக்குப் பிலுக்கென்றிருக்கும்வர்ணங்கள் ஏதோ தடவி அதன்மீது நல்ல வாசனையுள்ள பொன்நிறமுள்ள பொடிக ளென்னவோ தூவி அத்தர் முதலாகிய சுகந்தத்திரவியங்களை

பூசிக்கொண்டு தங்கள் மேனியின் வாசனை வீதியிற் குபீர் குபீரென்று வீசும்படியாகத் தீபம்வைத்தபிறகு திவ்ய வுருவங்கொண்ட வீட்டுத்தேவதையோ வென்னும்படி விளக்கின் பிரகாசத்தால் மினுக்கு மினுக்கென்ன ஜ்வலிக்கவும், வழியேபோகும் ஸ்திரீகளின் மனது கலங்குமாறு தினமும் தங்கள் வாசற்படியண்டை நின்று கொண்டு ஸ்திரீகள் தங்கள் சமீபத்தில் வந்தபோதெல்லாம் லச்சைப்பட்டு உள்ளேபோய்க்கதவுமறைவி லிருந்துகொண்டு முகத்தைவெளியில் நீட்டி எட்டி யெட்டிப்பார்த்துக்கொண்டிருப்பார்கள். அவ்வளவு அழகுள்ள புருஷர்கள் நமது தேசத்திற் கிடையாது. இரத்தினங்கள் பதித்த தங்கப் பிரதிமைகள் போல் நின்று பூமியில் வந்திறங்கின மின்னற் கொடியைப்போல் விளக்கொளியிற் பிரகாசித்துக்கொண்டிருக்கும்பொழுது என்போன்ற புருஷர்களுக்குக்கூடப் போய் அவர்கள்மேல் விழுந்து ஆலிங்கனம் செய்துகொள்ள வேண்டுமென்கிற புத்தி யுண்டாகும்பொழுது, ஸ்திரீகள் அவர்களைக்கண்டு மோகித்து அவர்கள் வலையிற் சிக்கிக்கொள்ளுதல் என்ன ஆச்சரியம்! ஐம்பது வயதானவர்கள்கூட நரைத்துப்போன தலைமயிருக்குக் கறுத்த வர்ணம்பூசி அலங்காரம் செய்துகொண்டு பதினாறுவயது பாலகுமாரர்கள்போலக் காணப்படுவார்கள். ஆயினும் நமது தேசங்களில் விவாகமுதலான சுபகாரியங்களுக்கு வேசிகளைப் பாடுவதற்காக வரவழைக்குமமாதிரி இவர்களைச் சுப காரியங்களுக்கு அழைப்பதில்லை. நமது தேவதாசிகளைப்போல இவர்கள்தேவாலயங்களிற் காணப்படுவதில்லை. கிருகதேவதை போலிருக்கின்ற இவர்களுக்கு வீடுகளே தேவாலயங்கள். இவர்களே அங்குள்ள தேவதைகள். இந்தத் தேவதைகளைத் தரிசனம் செய்யும் பொருட்டே தலைவர்களாகிய ஸ்திரீகள் அவர்கள் ஆலயங்களுக்குப்போய்த் தங்கள் சரீரத்தையும் திரவியத்தையும் அவர்களுக்குச் சமர்ப்பித்து அவர்கள்பிரசாதத்தைப்

பிரார்த்தித்துக்கொண்டிருப்பார்கள். தேவதா பக்தியுள்ளவர்கள் பொருளை இலட்சியம் செய்யாது அதனிடத்து வைராக்கிய முள்ளவர்களாயிருத்தல்போல, இந்தத் தேவதைகளை எப்பொழுதும் சேவிப்பவர்கள் ஆசையில்லாமையாற் பணத்தைப் பறிகொடுத்துத் தாங்களும் பரதேசிகளாய் விடுகிறார்கள்.

நமது தேவதைகளுக்குப்போலவே அந்தப்போகதேவதைகளுக்கும் அந்நிய ஸ்திரீகளிடத்திலிருந்தே வம்சவிருத்தி. ஆயினும் நமது தேவதைகளுக்குப்போல அழியாத தன்மை பொருந்தியிராத இவர்களுக்கு வம்சாபி விருத்தி எப்படியோ எனக்குத்தெரிந்த விஷயமன்று. விசேஷதிரவியங்கொடுத்து, ஏழைகளிடத்தில் வெகு அழகாயுள்ள குழந்தைகளை வாங்கிவந்து, இவர்கள் அவர்களுக்குச் சிறுபிராயமுதற் குளவி தன்னிறமாக்குவதுபோல் மானுடத்தன்மையைநீக்கி அவர்களுக்கு தெய்வத்தன்மையை உண்டாக்குவார்கள்.

அங்குக்கூட விவாகம் செய்யக்கன்னிகைகளின் இஷ்டத்தைக் கவனிப்பாரில்லை. தாய்தந்தையர்களே முக்கியமாய்த் தாய்களே கன்னிகைகளை வரிப்பார்கள். புருஷர்களுக்கு யுக்தவயசு வந்தபிறகு விவாகம் செய்யும்பக்ஷத்தில கல்யாணம் செய்துகொள்ள இஷ்டப்படாமல் தாய்தந்தையர் பேச்சைக்கேளாது குரூபியான பார்யையை நிக்ரகிப்பார்கள். அதனால் அவர்களுக்கு நேரிடும் குருவைமதியாமையாலுண்டாகும் பாவத்தினின்று அவர்களை விலக்குவதற்காகச்சிறுவயதிலேயே விவாகம் செய்வது நல்லவழக்கமென்று தங்கள் தர்மசாஸ்திரத்திற் சொல்லியுளதென்று சொல்லுவார்கள். அவர்கள் தர்மசாஸ்திரப்படி ஸ்திரீகளுக்கு 16 வயதிற்குள் கர்ப்பாதானம் செய்யக்கூடாது. 18-ஆம் வயதிற் செய்வது உத்கிருஷ்டம். அந்தக்காலத்திற் புருஷனுக்கு இருபதுவயதிருக்கவேண்டும். 16 வயதிலேயே

ஸ்திரீகளுக்குக் கர்ப்பாதானம் செய்தாலும் புருஷர்களுக்கு அப்பொழுதும் இருபதுவயதிருக்கவேண்டும் ஆகையாற் சாதாரணமாய்ப் பத்தினியைக்காட்டிலும் பர்த்தாவுக்கு 4 வயது அதிகமாயிருக்கவேண்டும். இரண்டாவது விவாகத்திற்கு இந்நியமமில்லை. அப்பொழுது பர்த்தா எவ்வளவு சிறியவனாயிருந்தாலு மிருக்கலாம். ஆனாலும் புருஷனுக்கு இருபதுவயது வரும்வரைக்கும் அவனுக்குச் சாந்திமுகூர்த்தம் செய்யப்படாது. ஆதலால் புருஷர்களுக்கு வயது வரும்வரைக்கும் ஸ்திரீகள் இஷ்டமிருந்தாற் போகபுருஷர்களை வைத்துக்கொள்ளலாம். புருஷனுக்குப் பன்னிரண்டாம் வயதுமுதல் 16-ஆம் வயதிற்குள் விவாகம் செய்வார்கள். பார்யையைக்காட்டிலும்பர்த்தாபெரியவனாயிருப்பதற்கு அவர்கள் அநேககாரணங்கூறுவர். அவற்றில் ஒன்று என்னவெனிற் புருஷர்களைக்காட்டிலும் ஸ்திரீகளுக்கு முன்னமேயே யுக்தவயது வந்துவிடுகிறது. ஸ்திரீகளுக்கு யுக்தவயது முன்னமேயேவருகிறதே, புருஷர்களைக்காட்டிலும் ஸ்திரீகள் உத்கிருஷ்டர் என்பதற்கு திருஷ்டாந்தமென்று அவர்கள் சொல்வார்கள். பர்த்தாக்கள் பத்தினிமாரைக்காட்டிலும் பெரியவர்களா யிருக்கவேண்டுமென்பதற்கு மற்றொரு காரணம்: பார்யைக்கு வயது வந்தபிறகு காக்காதிருப்பதும் புருஷர்கள் பார்யைக்குச் சேவை செய்யச்சமர்த்தர்களாயிருக்கும்பொருட்டும் என்றுமுன்னமே சொல்லப்பட்டிருக்கிறது. அந்தத்தேசத்திற் சமையல் செய்பவர்கள் புருஷர்களென்று முன்னம் சொல்லப்பட்டிருக்கிறது. நமது தேசத்திற்போல ஸ்திரீகள் சமையல் செய்யும்பக்ஷத்தில் அவர்கள் கர்ப்பமாகிப் பிரசவிக்கிறது முதலிய காலங்களில் இடையூறு நேரிடுமாதலால் அப்படிப்பட்ட தடைகளொன்றும் இல்லாதிருப்பதற்காகப் பாக ஶாலின புருஷர்களைச் சமையல் செய்ய ஏற்பாடு செய்தாரென்று அவர்கள் வாதிப்பார்கள்.

நமதுதேசத்தில் ஸ்திரீகளுக்கு 'ராணிவாசம்' இருக்கிறமாதிரி அத்தேசத்திலும் புருஷர்களுக்கு ராணிவாசம் உண்டு. நமது தேசத்து வழக்கம் அங்குமாதிரி இல்லாதிருத்தலினால் அதற்கு என்னபெயர் வைக்கலாமென்று எனக்குத்தெரியவில்லை. ரண்டிபாஷையில் அதற்குக்"கோடா" என்றுபெயர். அது நமது தேசத்திலுள்ள "கோஷா" என்னும் பதத்திற்கு ஒத்திருக்கின்றது. ஒருவேளை அது "கோஷா" என்னும் பதத்தினின்றே உண்டாயிருக்கலாம். பாஷைவேறுபாட்டால் 'ஷா'வுக்கு 'டா' வரலாகும். அதை நான் ராணிவாசமென்று சொல்வதற்குப்பதிலாக ராஜவாசமென்று சொல்லுவேன். நமதுதேசத்திலுள்ள ஸ்திரீகளுக்கு ராணிவாசம் 12-ஆம்வயதில் ஆரம்பமாவது போலவே அத்தேசத்திற்புருஷர்களுக்கு ராஜவாசம் பதினாறாம்வயதில் ஆரம்பமாகிறது. அங்குராஜவாசம் நமது தேசத்து ராணிவாசத்தைக் காட்டிலும் அதியற்புதமாயிருக்கும். துரைத்தன உத்தியோகஸ்தர்களும் தனவான்களும் நாம இங்குத் திரவியத்தை வைப்பதற்காகச் செய்கின்றமாதிரி பெரிய இருப்புப்பெட்டிகள் செய்கிறார்கள். ஒவ்வொருபெட்டியின் உயரம் 7 அடி 6 அங்குலம்; நீளம் 7 அடி 3 அங்குலம்; அகலம் 4 அடி 2 அங்குலம்; சுற்றி இருப்புத்தகட்டின் கனம் ¾ அங்குலம்; அதின் கதவு 2 அடி அகலமும், 4 அடி உயரமுமாயிருக்கும். அதன் பூட்டு யாருந்திறவாதபடி பிரம்மாவும் உடைக்கமுடியாத அவ்வளவு உறுதியாயிருக்கும். இந்தப்பெட்டிக்கு வெளிச்சம் வருவதற்காகவும் காற்றுவருவதற்காகவும் இரண்டுபக்கமும் சுவருக்கு அடியிற் சதுரமாக இரண்டு ஜன்னல்கள் வைக்கப்பட்டு அவைகள் இருப்புக்கம்பிகளாற் குறுக்காகத்தடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த ராசவாசத்தில் 16 வயது வந்தது முதல் கனவதிகளது புருஷர்கள் பகலெல்லாம் நிர்ப்பந்தமாய் வைக்கப்படுவார்கள். காலையில் ஸ்திரீகள் சாப்பிடும்பொழுது

9 மணியாகும். பிறகு 10 மணிக்குட் பர்த்தாவின் போஜனம்முடியும். போஜனம் முடிந்தானதும் பத்தினிமார்கள் தங்கள் புருஷர்களைமேலே வர்ணித்துச்சொல்லப்பட்ட ராஜக்கிரகத்தில் வைத்துத் தாளிட்டு அந்தத்தாளை தங்கள்கையிலெடுத்துக்கொண்டு தாங்கள் உத்தியோகம் செய்யுமிடத்திற்கும் தங்கள் வியாபாரஸ்தானங்களுக்கும் போவார்கள். அவர்கள் மறுபடியும் சாயங்காலம் 5 மணிக்கு வீட்டுக்கு வந்து பூட்டைத்திறக்கப் புருஷர்கள் வெளியில்வந்துசமையல்முதலான காரியங்களைச்செய்வார்கள். இதனாற் புருஷர்கள் இருப்புப்பெட்டியிற் பகலெல்லாம் சோம்பேறிகளாய் மகாராஜாக்கள் போல நித்திரை செய்வார்களென்று உங்களிற்சிலர் ஊகிப்பது சரியன்று. படுத்துக்கொள்ள அந்தஅறையில் 2 அடி அகலமும் 5 அடிநீளமும் உள்ள ஒரு கட்டிலிருந்தாலும் அதிலேயே மாவு முதலிய அரைப்பதற்குக்கோதும்பையும் இயந்திரமும், காய்கறிகளறுக்க அரிவாள் மணையும், இன்னும் மற்றவேலை செய்யத்தக்க சாதனங்களும் சாமக்கிரியைகளும் இருந்தமையால் அவர்கள் அதனுள்ளேயே வேலைசெய்துவிட்டு, வேண்டும்பொழுது கட்டிலின்மீது படுத்துக்கொள்வார்கள். இந்த வழக்கத்தால் ஸண்டித் தேசத்திற் குலபுருஷர்களிடத்தில் விபசாரமென்கிற பேச்சேகிடையாது. ஸ்திரீகளுக்கு எப்பொழுதும் புருஷர்கள்மேற் சந்தேகம் அதிகமாதலால் இந்தப் புருஷர்கள்மேற்கூடக் குற்றங்கூறுவார்களானாலும், நான் பார்த்தவரையிற் புருஷர்கள் ஒருவருக்கும் கர்ப்பம் உண்டாகாதிருந்தமையால் அவர்கள் வார்த்தையை நம்பேன். இந்தப் பெட்டியைச் செய்யும் ஸ்திரீகள் மாறுசாவிசெய்து தங்களிடம் வைத்துக்கொண்டு விசேஷபொருள் பெற்றுத் தனவதிகளாகிய அந்நிய ஸ்திரீகளுக்கு விற்பார்களென்றும், அதன் மூலமாய் விபசாரங்கள் நடக்குமென்றும், பொறாமையுள்ளவர்கள் உண்மை அல்

லாத பழியை உண்டாக்கிச் சொல்வார்கள். இருப்புப் பெட்டிவாங்கச்சக்தியில்லாதவர்கள் இம்மாதிரியாகவே மரப்பெட்டிகளைச் செய்துகொள்ளுவார்கள், அதற்கும்வகையில்லாதவர்கள் தங்கள் பதிகளை வீட்டிலுள்ள ஓர் அறையிலேயே வைத்துத்தாளிட்டு அதனோடு திருப்தியடைந்திருப்பார்கள். இந்தவழக்கத்தை நாம் தப்பாமல் நமது தேசத்திற்கூட ஏற்படுத்தவேண்டும். அநுபோகந்தெரிந்த என் வார்த்தையைக்கேட்டு இந்தப்பெட்டி வழக்கத்தை நமது தேசத்திற் பரவச்செய்து ஸ்திரீகளை அங்குவைத்துத்தாளிட்டுக்கொண்டுவந்த பட்சத்தில் வெகு சொற்பகாலத்துக்குள்ளேயே நமதுதேசத்திற் பரஸ்திரீகமனம் நசித்துப்போய் நமது தேசம் மிக்கபரிசுத்தமான தேசமாய்விடும். வெளியிலுள்ளவர்களுக்குச் சொல்லவும் அவர்கள் பதிலைக்கேட்கவும் இடமுண்டாகிறபடியால் அந்தப்பெட்டிக்கு நாம் சாளரங்கள் மாத்திரம் வைக்கக்கூடாது, நமதுதேசத்திற் பெட்டி செய்பவர்கள் புருஷர்களே யாதலால் மாறு சாவி விஷயமா யிந்தத்தேசத்திலுள்ள ஸ்திரீகளிடத்தில் நடக்கிற மோசகாரியங்கள் நமது தேசத்தில் நடவாது. அதுமாத்திரமேயன்றி இந்தப்பெட்டிசெய்வதனால் ஸ்திரீகளின்மானம் காக்கப்படுவதோடுகூட கருமார்களுக்கும் தச்சர்களுக்கும் புதிதாக ஜீவனாதாரம் உண்டாய்த்தேசம் நல்லபாக்கியத்தை அடையும். ஆகையால் நான்சொல்லும் நன்மையை நீங்கள் அலட்சியம்செய்யப்போகிறீர்கள். என்தேசயாத்திரையாலல்லவா பரதகண்டத்திற்கு இப்பேருதவியுண்டாயிற்று! தேசயாத்திரையால் விசேஷபயனுளதென்று பெரியோர்கள் சொல்லும்வார்த்தை பொய்க்குமா?

புருஷர்களுக்கு நாற்பது வயதானதும் ராஜவாசபந்தம் நீங்கும். இந்த நிர்ப்பந்தம் தாரமிழந்த விதவர்களுக்குக்கூட இராது. அதனால் புருஷர்கள் தங்களிஷ்டம்போ

விருப்பதற்குத் தங்கள் பத்னிமார்களுக்கு விஷத்தைக் கொடுப்பார்களென்றாலும், விதவையாகும் (பெண்சாதியை யிழக்கும்) பொழுதே மூக்கை அறுத்து விடுவார்களென்கிற பயத்தினால் அப்படிப்பட்ட வேலைக்குத் துணியாது தங்கள் பத்னிமார்களிடத்திற் பக்தியுடன் நடப்பார்கள்.

---

## அத்தியாயம் - கூ.

---

என் எசமானியாகிய பாண்டிபங்கீயார் பாண்டித்திய முள்ளவளான பாங்கீபிண்டியாளை நியமித்து எனக்கு இவ்வாறு வித்தை சொல்லிக் கொடுத்துக்கொண்டு வந்ததும், ரண்டிபாஷையில் நான் தக்கவாறு பாண்டித்தியம் பெற்றபிறகு துரைத்தனத்தார் புதிதாகஸ்தாபித்த புருஷபாடசாலைக்கு என்னையனுப்புவித்ததும், அங்கு எனக்குப் பள்ளித் தோழனான மற்றொருபுருஷன் எனக்கு நண்பனானதும், நான் உங்களுக்கு முன்னமே தெரிவித்திருக்கிறேனல்லவா? நாங்கள் இருவரைத்தவிர வேறுயாரும் அந்தப்பாடசாலையிற் சேரவில்லை. எங்களுக்கு உபாத்தியாயராக நியமிக்கப்பட்ட அந்நியஜாதி புருஷன் பெயர் சாமர்சி அவனுக்கு ரண்டிபாஷையில் விசேஷபாண்டித்தியம் இல்லாதிருந்தபோதிலும் தன் சுயபாஷையில் மகாவித்துவானாய்ச சங்கீதத்திலும் சித்திரமெழுதுவதிலும் சிற்பவேலையிலும் பிரகிருதசாஸ்திரத்திலும் இணையில்லாத சாமர்த்தியமுள்ள நாகரிக சிரேஷ்டன். அவன் எங்கள் இருவருக்கும் வித்தை சொல்லிக்கொடுத்தது மல்லாமல் புருஷர்கள் பெறத்தக்க சுதந்திரங்களைக்குறித்தும் கல்வி கற்பதால் உண்டாகும்பயனைப் பற்றியுங் கூடப்பலதடவை போதித்துக்கொண்டிருந்தான். புருஷர் கல்விகற்பதிலும் சுதந்திரமடைவதிலும் எனக்குப் புதிதாக ஒன்றுந் தோன்றாமற் போனபோதிலும் அந்த தேசவழக்கப்படி ஸ்திரீகளுக்கு அடிமையாயிருந்து வழங்

கப்பட்ட எனது பாடசாலைத் தோழனுக்கு மாத்திரம் அவை விந்தையாய்க் காணப்பட்டு அதிக உற்சாகத்தையுண்டாக்கிக்கொண்டு வந்தன. எங்கள் உபாத்தியாயர் சொல்லித்தந்த போதனைகளாலும் செய்த உபந்நியாசங்களாலும் அல்லாதுபோயினும், ஸ்திரீகளின் அதிகாரத்தை நிலைகுலைத்து அத்தேசத்தில் அதற்குப்பதிலாக புருஷர்கள் சுதந்திரங்களை நிலைநிறுத்தவேண்டுமென்னும் ஆசையால் இயற்கையாகவே அவர்களிருவரினும் எனக்கு அதிக உற்சாகமிருந்தது. என்கூடப்படித்தவனுக்குச் சற்றேறக்குறைய இருபதுவயதிருக்கும். அவனுக்குப் பத்தினியில்லை. புதுநாகரீகத்தையநுஷ்டிக்கும் நவநாகரீகர்களில் ஒருவனான அவனது தமக்கையின் பிரேரபணையாற் சிறுபிராயமுதல் சிறிது கல்வி கற்றுக்கொண்டு வந்தவன். முன்னாட்களில் லட்சுமணர் சூர்ப்பணகையின் மூக்கையறுத்தமாதிரி மடாதிபதிகள் தாரமிழந்தவனான அவன் மூக்கின் முனையை இதுவரையில் அறுத்திருப்பார்களானாலும் ராஜாங்கபாஷையைப்படித்து நவநாகரிகர்களில் ஒருத்தியாய் ராஜாங்க உத்தியோகத்திலிருந்த அவன் தமக்கை அந்தவேலைக்கு இடங்கொடுக்கவில்லை, பந்துஜனங்களை விரோதித்துக்கொண்டு இப்பொழுது அவனை ராஜாங்கபாடசாலைக் கனுப்பியதும் அத்தமக்கையே. சகபாடியான என் மித்திரன் பெயர் பாடிப்போட். நான் கிரமமாய்த் தினந்தோறும் பாடசாலைக்குப்போய்ப் பாடங்களைப் படித்துக்கொண்டு வந்தாலும் என்தோழன் மாத்திரம் நோன்புமுதலிய விரதங்களின் பொருட்டு வாரத்தில் 3-4-நாள் பள்ளிக்கூடத்திற்கு வாராமல் நின்றுவிடுவது வழக்கம். நமது தேசத்தில் ஸ்திரீகளுக்கு எத்தனை நோன்பு முதலிய விரதங்களிருக்கின்றனவோ அதற்கிரண்டு பங்கான விரதங்கள் அத்தேசத்திலுள்ள புருஷர்களுக்குண்டு. அவர்கள் ஞாயிற்றுக்கிழமை அதிகாலையில் கருணைக்கிழங்குமுளையைப்பூசிப்பார்கள். சாயங்காலத்

திற் சேனைக்கிழங்கைப் பூசைசெய்வார்கள். திங்கட்கிழமை பகலில் அம்மிக்கல்லைப்பூஜிப்பார்கள். சாயங்காலத்தில் உரலைவைத்துப் பூசைசெய்வார்கள். இடையிடையே வரும் விசேஷவிரதங்களைத் தவிர இந்தப்பிரகாரம் தினத்துக்கிரண்டுவிழுக்காடு புருஷர்கள் ஒருவருஷத்தில் 730-நோன்பு நோற்பார்கள். சாதாரண புருஷர்கள் எல்லாநோன்பையும் நோலாவிட்டாலும் தாரமிழந்தவர்களும் தனவான்களும் விசேஷமாய் நோன்புகளை நோற்று அவ்வாறே தங்கள் காலத்தைக்கழித்துக்கொண்டு தங்கள் திரவியங்களைத் திருட்டுத்தனமாய்ப் பறிக்கும் குருக்களுக்கு அர்ப்பிதம் செய்வார்கள். என்பாடசாலைத்தோழன் இத்தனை நோன்புகளையும் நோற்பது அவன் தமக்கைக்கு இஷ்டமில்லாததனால் தன் தமக்கைக்குத் தெரியாமல் அவள் கச்சேரிக்குப்போனபிறகு அவன் பள்ளிக்கூடத்தை விட்டு இரகசியமாய்க் கிழவியான தாயாருடையவும் வீட்டிலுள்ள வேறுபுருஷர்களுடையவுந் தூண்டுகோலால் நோன்பு நோற்றுக்கொண்டுவந்தான். இந்த விரதங்கள் பயனில்லையென்று நானும் என் உபாத்தியாயரான சாமர்ஜியாருங் கூடப் பன்முறை என் தோழனை பாடிப்போட்டுக்குப் போதித்துக்கொண்டு வந்தபோது அவன் எங்களிடத்தில் “அப்படியேயாகட்டு” மென்றுதலையாட்டி “இனிநோன்புகளைச்செய்வதில்லை, விட்டுவிட்டேன்” என்று ஒட்டுவைத்துக்கொண்டு வந்தபோதிலும் எங்களைவிட்டு வீட்டுக்குப்போனதும் அந்தவார்த்தையை மறந்து முன்போலவே அநுஷ்டித்துக்கொண்டு வந்தான். எவ்வளவு படித்தபோதிலும் நெடுங்காலமாய் வந்துகொண்டுவந்த அந்தவழக்கத்தை ஒரேதடவையாகவிடுதல் எப்படிப்பட்டவர்களுக்கும் வெகு கஷ்டமாகவேயிருக்கும். அதனால் அவனை நான் தினந்தோறும் பாடசாலைக்கு அழைத்துக்கொண்டுபோக அவன் வீட்டுவழியாய்ப்போய் அவனையும் என்னோடுகூடப்பிட்டுக்கொண்டுபோய்வந்தேன்.

இவ்வாறாகக்கொஞ்சகாலம்சென்றபிறகு நாங்கள் இருவரும் கூடி ஒருநாள் பாடசாலைக்குப் போய்க்கொண்டிருக்கையில் வழியில் "நான் உனக்கு ஒரு விநோதங்காண்பிக்கிறேன் வா" என்று என்தோழன் என்னை ஊருக்குவெளியில் அழைத்துக்கொண்டு போனான். அதற்கு முன்னமேயே வேடிக்கைபார்ப்பதற்காக ஸ்திரீகள் அங்கு தீர்த்தயாத்திரைக்காரர்கள் போல் வந்திருந்தார்கள். அக்கூட்டத்தில் பெண்சாதியை யிழக்காத புண்ணியபுருஷர்கள் இடையிடையே சிலரிருந்தனர். அப்பட்டணத்தில் முதல்நாள் ராத்திரி பணக்காரியான வயதுசென்ற ஒருவர்த்தக ஸ்திரீ மரணமடைந்தாள். அக்கிழவியின் பர்த்தா மரணமடைந்த தன் பத்தினியுடன்கூட உடன்கட்டை யேறுவதற்குத் தீர்மானித்துச்சுடுகாட்டுக்குப்போனமையால் வேடிக்கைபார்ப்பதற்கும் புண்ணியத்தைத்தேடிக்கொள்வதற்கும் ஆயிரக்கணக்காய் ஜனங்கள் அங்குக்கூடினார்கள். நாங்கள் போனபொழுது செய்யவேண்டிய கர்மங்களெல்லாம் நடந்தாயின. நாங்கள் போனபிறகு கிழவியின் பிணத்தை நான்கு பேர் தூக்கிக்கொண்டுபோய் அதுவரையில் வெட்டப்பட்டிருந்த குழியில் நிலத்தில் முகம்படும்படி நெடுக்காகப் படுக்கவைத்தார்கள். அதற்குள் புரோகிதர் மந்திரங்களைச் சொல்லிக்கொண்டே பர்த்தாவின் கையைப் பிடித்துக்கொண்டு அந்தக் குழிக்குச் சமீபத்தில் அழைத்துக்கொண்டு போக, அறுபதுவயதுள்ள அந்தக்கிழவன் தன்சரீரத்தின்மீதிருந்த இரண்டொன்று நகைகளைக்களைந்து சமீபத்திலிருந்த புருஷர்களுக்குத் தானம்செய்து சந்தோஷத்துடனே சமாதிக்குள் இறங்கி பத்தினியின் இடதுபக்கத்தில் தானும்முகத்தைக் குப்புற வைத்துப் படுத்துக்கொண்டான். அப்பொழுது புரோகிதஸ்திரீகள் நமது தேசத்தில் வேதகோஷஞ்செய்வதுபோல்ஒருநாழிகைநேரம் என்னவோமந்திரங்களைச்சொல்லி என்னவோகர்மங்கள் செய்துகொண்டிருந்

தார்கள். இதற்குள்பன்னிரண்டு ஸ்திரீகள் பெரியகூடைகள் நிறைய மண்வைத்துக்கொண்டு குழியைச்சுற்றி நின்றுகொண்டிருந்தார்கள். அப்பொழுது பலத்த சப்தத்துடன் வாத்தியம்முழங்கிக்கொண்டிருந்தது. அச்சந்தடியில் முக்கியமான புரோகிதஸ்திரீயானவள் ஏதோ மந்திரங்களைச்சொல்லிக்கொண்டு கையைவீசினதும் திடீரென்று ஏககாலத்தில் பன்னிரு ஸ்திரீகளும் தங்கள் கூடைகளிலிருந்த மண்ணை அக்குழியில்கொட்டினார்கள். அதன்பிறகு புண்ணியபுருஷர்கள் ஒருவர் ஒருவராய் வந்து தட்டு தட்டுமண் அதன்மீது கொட்டிவிட்டு வணங்கிச் சென்றார்கள். பாடசாலைக்குப் போகவேண்டியகாலம் மீறிப்போகிறதென்று அவ்விடத்தைவிட்டு நானும் என்மித்திரனும் வழிமுழுவதும் உடன்கட்டை யேறுவதைப்பற்றிப் பேசிக்கொண்டே வேகமாக அப்படியே பாடசாலைக்குச் சென்றோம். அத்தேசத்தில் ஐம்பதுவயதானவொழிய புருஷர்கள் சக்கமனம் செய்யக்கூடாது. ஐம்பது வயதுவரையில் தன்பத்தினியுடன்கூடி வாழ்ந்தவனை அத்தேசத்தில் புண்ணிய புருஷனென்பார்கள். அப்படிப்பட்ட புண்ணியபுருஷர்கள் தங்கள் பத்தினியின் மரணகாலத்தில் சககமனம் செய்வார்களாயின் முப்பத்து மூன்றுதலை முறைவரையில் தங்கள் தாய்வம்சத்தோரையும் தந்தைவம்சத்தோரையும் மாத்திரமேயல்லாமல் தங்களதுபத்தினியின் தாய்வம்சத்தாரையும் தந்தைவம்சத்தாரையுங்கூட கிருதார்த்தர்களாக்கி மகாபாபிகளையுங்கூட புண்ணியலோகத்தில் சேர்ப்பார்கள். அத்தேசத்தில் பிணத்தைப்புதைப்பது வழக்கமேயன்றித் தகனம் செய்வதில்லை. சமாதியில் தம்பதிகளைக்குப்புறப்படுக்க வைப்பதற்குக்காரணம் என்னவாயிருக்கலாமென்று எனது நண்பனைக்கேட்டேன். புண்ணியலோகங்கள் கீழேயிருந்தபடியினால் அவர்கள் ஆத்மா மெள்ள அங்குச் செல்லுமாறு அப்படிச் செய்கிறார்கள் என்று அவன்பதில் மொழிந்தான். புண்ணியலோ

கம் மேலேயிருப்பதால் ஊர்த்துவலோகம் என்னப்படும் என்றும், பாபலோகங்கள் கீழேயிருப்பதால் அதோலோகமென்னப்படும் என்றும் நமது சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. அத்தேசத்தவர்கள் சாஸ்திரவிரோதமாகப்புண்ணியலோகமே கீழேயிருக்கிறதென்றுசொல்லுகிறார்கள். புண்ணியம் பாவம் என்னும் பதங்களின் பிரயோக மெவ்வாறாயிருந்தபோதிலும் அவர்கள் இவ்வாறு எல்லாவிஷயங்களிலும் புருஷர்களுக்கு அநியாயம் செய்வதால் அவர்கள் பாதாளலோகத்துக்கேகுவது நிச்சயமென்று நான் நினைத்துக் கொண்டேன். இந்த சககமனத்தை அவர்கள் பாஷையில் "பூநீஜ-ஏதீ" என்பார்கள். அதற்கு சுவர்க்கயாத்திரை என்றருத்தம். இந்த சம்பாஷணை முடியும் சமயத்தில் நாங்கள் பாடசாலைப் போய்ச்சேர்ந்தோம். எங்கள் உபாத்தியாயர் வெகு நாழிகையாக எங்களுக்காகக் காத்துக்கொண்டிருந்து நாங்கள் போனதும் இத்தனை நாழிகை என்ன செய்தீர்கள் என்று கேட்டார். தாமதம் "சுவர்க்கயாத்திரை" யைப்பார்க்கப் போனதினாலென்று சொன்னோம். அதன்மீது அன்று அவர் புத்தகங்களைக் கட்டிவைத்துவிட்டு நிச்சயமாய் அது நரகயாத்திரையே அன்றி சுவர்க்கயாத்திரை யன்றென்றும் அப்படிப்பட்ட குரூரதொழிலை, ஜனங்கள் விவேகத்தையடைந்து தாங்களே விடாவிட்டாலும் துரைத்தனத்தார் பலவந்தமாகவாயினும் நிறுத்த வேண்டுமென்றும் வெகுநேரம் பிரசங்கித்தார். இந்தப்பிரசங்கத்தில் நமது தேச வழக்கத்தின் சங்கதிகூட வந்தது. புருஷர்கள் விஷயமாய் இப்படிச்செய்வது கெட்டகாரியமாயிருந்தாலும் பர்த்தாவின் மரணம் நேரிடுங்காலத்தில் உடன்கட்டையேறுதல் பதிவிரதைகளானபத்தினிமார்களுக்கு விசேஷ தர்மமென்றும் இத்தேசத்தைப்போலவே வயதுசென்றவர்கள் மாத்திரமேயல்லாமல் எட்டு வயதுள்ள சிறுமிகள்கூட பர்த்தா இறந்தபொழுது முன்

ஞட்களில் எங்கள்தேசத்தில் உடன்கட்டையேறிக்கொண்டிருந்தார்களென்றும் எங்கள் தேசத்திற்கு அந்நியதேசஸ்தர்கள் அரசர்களானபிறகு இந்த நல்வழக்கத்தை நிறுத்திப்பாவத்தைக்கட்டிக்கொண்டார்களென்றும் சொல்லி சககமன மாகாத்மியத்தை எடுத்துரைத்தேன். பர்த்தாக்கள் இறந்தபொழுது பத்தினிமார்கள் சுடுகாட்டில் அடுக்கியிருக்கும் கட்டையின்மீது ஏறி ஒருநிமிஷத்தில் அக்நிஹோத்திரம் செய்யும்பொழுது நெருப்பில்விட்ட நெய்யைப்போல பஸ்மமாய் விடுவார்களென்று நான் சொன்னபொழுது அவர் அது குரூரமான தொழிலென்றும் துரைத்தனத்தார் அதை நிறுத்தியது கொண்டாடத்தக்க விஷயமேயென்றும் தன்தேசத்தில் துரைத்தனத்தாருக்கு அப்படிப்பட்ட துணிவு இல்லையென்றும் மிகுந்த விசனத்துடனே சொன்னார். புருஷர்களை உயிருடன் புதைக்கிற கெட்ட வழக்கத்தை நிறுத்தவேண்டுவது அவசியமென்று அவர் சொன்னதை நான் ஒத்துக்கொண்டபோதிலும் நமதுதேச சங்கதிமாத்திரம அவர் ஆழ்ந்து ஆலோசிக்கவில்லை யென்றும் சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிற சங்கதி அவருக்குத் தெரியா திருக்குமென்றும் நினைத்து எங்களுடையது கேவலம் வழக்க மன்றென்றும் பிரத்தியக்ஷ சாஸ்திரப்பிரமாணமென்றும் இக்கலியுகத்தில் விசேஷ பிரமாணமாயுள்ள பராசரஸ்மிருதியில்

*சுலோகம்:—திஸ்ரஃ கோட்யர்த்த கோடீச யாநிலோமாநி மானுவேஷ
தாவத்காலம் வஸேத்ஸ்வர்கே பர்தாரம் யாநுகச்சதி*

என்று பதியுடன் உடன்கட்டையேறின புண்ணியஸ்திரீ மனிததேகத்தில் எத்தனை உரோமங்கள் (மயிர்கள்) இருக்கின்றனவோ அத்தனை வருஷகாலம் அதாவது மூன்று கோடி ஐம்பது லட்சம் ஆயிரவருஷங்கள் சுவர்க்கத்தில் இருப்பாளென்று சொல்லப்பட்டிருக்கிறதென்றும்

யானிலோமானி மாநுஷே தாவத்யப்த ஸஹஸ்ராணி

யென்று ஹரீதர்கூடத் தெளிவாய்ச் சொல்லி யிருக்கிறா ரென்றும்

சு.-பிரம்மக்நோவா க்ரதக்நோவா மித்ரக்நோவாபி மாநவ:
தம்வை புநாதி ஸாநாரீ இத்யங்கிரஸ பாஷிதம்.

என்று உடன்கட்டையேறின ஸ்திரீ, பர்த்தா பிரம்மஹத்தி செய்தவனாயிருந்தபோதிலும் நன்றிகெட்டவனா யிருந்த போதிலும் தோழனைக் கொலைசெய்தவனா யிருந்தாலுங் கூட அவனைப் பரிசுத்தனாக்குவாள் என்று சொல்லப்பட்டிருக்கிறதென்றும் அதனால் சாஸ்திரசம்மதமான இந்தவழக்கத்தை நிஷித்தமாகச் சொல்லக்கூடாதென்றும் ஆஸ்திகர்களான அவர்களெல்லாருடையவும் சாஸ்திரப் பிரமாணங்களைச்சிரசாகவகித்து, அற்பமான இந்தமாநுட புத்திக்குக் குரூரமாய்க்காணப்பட்டாலுந் தப்பாமல் அநுஷ்டிக்கப்படவேண்டியதென்றும், நிந்தைக்கிடமான ஆசாரத்தைச் சிஷ்டர்களான எம்மவர்கள் அங்கீகரித் திருக்கமாட்டார்களாதலால் தப்பாது அது நல்லவழக்கமேயென்றும், நான் உறுத்திச்சொன்னேன். அதன்மீது அவர் சிறிது நேரம் ஆலோசித்துச சுயநயத்தை நாடினவர்களான மனிதர்கள் எவரோ ஏதோகாரணத்தால் அவ்வாறு சுலோகங்களைக்கற்பித்திருப்பார்களென்று சொன்னார். நான் அவ்வார்த்தைக்குச் சம்மதியாமல் மனிதர்கள் அவ்வாறு கற்பனைசெய்தல் சாத்தியமன்றென்றும், மனிதர்களால் உண்டாக்கப்பட்டிருந்தால்

"மோத்யாமுகே மாஸி அமுகே பக்ஷே முகதிதௌ அமுக கோத்ரா ஸ்ரீமதி அமுகி தேவீ அருந்ததீ ஸமாசாரத்வ பூர்வக ஸ்வர்கலோக மஹீயமாநத்வ மாநவாதி கரணகலோம ஸம ஸங்க்யாப்தாவச்சின்ன ஸ்வர்கவாஸ பர்த்ருஸஹித மோதமாநத்வ மாத்ரு பித்ரு ச்வசுரகுலத்ரிய பூதத்வ சதுர்த சேத்ராவச்சிந்ந யாலாதிகரண காப்ஸரோகணஸ்தூயமாநத்வ பதிஸஹித க்ரீடமாநத்வ பிரம்மக்ந க்ருதக்ந மித்ரக்ந பதிபூதத்வகாமாபர்த்ருஜ்வலச்சிதாரோகணமஹங்க ரிஷ்யே',

என்கிற சங்கல்பம் ஏன் உண்டாயிற்றென்றும், முதல் முதல் இஃது ஒன்றுக்கு எனக்குச் சமாதானம் சொல்லவேண்டியதென்றும் நான் வேண்டினேன். அந்தச் சங்கல்பத்துக்கு அர்த்தமென்னவென்று அவர் என்னைக் கேட்கவும், "நமஸ்காரம், நான் இந்தமாசம் இந்தப்பக்ஷம் இந்தத்திதியன்று இந்தக் கோத்ரத்தை யுடையவனாய் இந்தப்பெயருடையவனாய்ப் பாக்கியவானானநான் அருந்ததியைப்போல நடப்பதனாலுண்டாகும் ஸ்வர்க்கலோக மஹிமையைப் பெறுவதற்கும், மனித சரீரத்தில்எத்தனை மயிரிருக்குமோ அத்தனைவருஷகாலம் பர்த்தாவுடன்கூடி நான் சுவர்க்கத்தில்வாழ்ந்துசுகமனுபவிக்க வேண்டுமென்றும், தாய்தந்தை மாமனார் இவர்களது மூன்று வம்சங்களையும் புனிதமாக்குவதற்கும்,பதினான்கு இந்திரன் காலம்வரையில் அப்சரஸ்கணங்களால் துதிக்கப்பட்டுப் பதியுடன்கூடக் கிரீடை நடத்துவதற்கும், பிரம்மகத்தி செய்தவனாயிருந்தாலும், நன்றியில்லாதவனாயிருந்தாலும், மித்திர துரோகியாயிருந்தாலும் என்பர்த்தாவைப் புனிதனாக்குவதற்கும் வேண்டி எரிகின்ற பர்த்தாவினது காஷ்டத்தில் ஏறுகிறேன்" என்று மேலேசொன்ன சங்கல்பத்துக்கு அருத்தமென்று நான் விவரமாய்ச்சொன்னேன். அர்த்தத்தைக் கேட்டபிறகுகூட எங்கள் உபாத்தியாயர் சககமனம் நல்லகாரியமென்று ஒப்புக்கொள்ளாமல் இப்படிப்பட்ட சங்கல்பத்தைக் கொஞ்சம் ஸம்ஸ்கிருதம் படித்தவர்கள் எவர்களானாலும் உண்டாக்கக்கூடும் என்று சமாதானம் சொன்னார். இது கற்பனையன்றென்றும், தர்மசாஸ்திரத்தில்

ஸ்ரீ. "ம்ருதேபர்தரி யாநாரீ ஸமாரோஹேத் துதாசநம்
ஸாருந்ததீ ஸமாசாரா ஸ்வர்கலோகே மஹீயதே" என்றும்

ஸ்ரீ. "யாசபர்த்ரு பராநித்யம் ஸ்தூயமாநாப் ஸரோகணை:
க்ரீடதே பதிநாஸார்த்தம் யாவதிந்த்ராச்ச தூர்தச."

என்றும் ப்ரமாணங்களிருக்கிறபடியாலேயும் ப்ரமாணங்களுக்குப் பத்தப்பட்ட நமது சாஸ்திரங்களைத் திரஸ்காரம் செய்யக்கூடாதென்றும், நான் எவ்வளவு வாதித்தாலும் என்வார்த்தையைச் சிறிதும் கவுரவம் செய்யாமல் மூர்க்கனுன அவன் சர்வகாருண்யரான பகவான் இப்படிப்பட்ட குரூரத்தொழிலை விதித்திருக்க மாட்டாரென்றும இவைகளெல்லாம் விதவைகளின் தனத்தை யபகரிக்குமபொருட்டோ, வேறு எந்தக்காரணத்தாலோ சுய பிரயோசனத்தை நாடியவர்கள் செய்த மோசமென்றும், யுக்திக்கும் நியாயத்துக்கும் விரோதமாயுள்ள சாஸ்திரத்தை நம்பக்கூடாதென்றும் அவர் ஏதேதோ குயுக்தி சொல்லவாரம்பித்தார். அப்பேச்சைக்கேட்டதும் நான் காதை மூடிக்கொண்டு ஹரிநாம ஸ்மரணை செய்துகொண்டு சாஸ்திரவிசுவாசமில்லாத நாஸ்திகர்களோடு சம்பாஷித்தாற் பாவம் வருமென்று எண்ணி அந்தப்பிரசங்கம் அவ்வளவோடு போதுமென்றேன்.

அவர் மாத்திரம் சககமன விஷயத்தை அவ்வளவோடு விடாமல், எனக்குப் பிரிய மில்லாதிருக்கிறதென்று அதைத் தூஷிப்பதைமாத்திரம் நிறுத்திவிட்டு "சககமனத்தைத் துரைத்தனத்தார் நிறுத்துவதற்கு முன்பு உங்கள் தேசத்தில் வருஷத்துக்கு எத்தனை உடன்கட்டை யேறுதல் நடந்து வந்தது?" என்றும், "இப்பொழுது உங்கள் தேசத்தில் எத்தனை விதவைகள் இருக்கிறார்கள்?" என்றும் பலவகைக் கேள்விகள் கேட்க ஆரம்பித்தார். எனது வித்யாகுருவான பெரியமனிதர் கேட்டதற்கு மறுமொழிசொல்லாதிருத்தல் பிடிவாதமா யிருக்குமென்று எண்ணி எனக்குத் தெரிந்தவரையில் அவர்கள் கேட்ட பிரச்னைகள் அத்தனைக்கும் நான் பின்வரும் பதில் மொழிந்தேன்:—

எங்கள் தேசத்திற் சககமனமாகிய நல்லவழக்கத்தை நிறுத்த முதலமுதலில் மதத்துவேஷிகளான கிறிஸ்துமதஸ்

கள் கிறிஸ்து பிறந்த 1808௵த்தில் கல்கத்தா நகரத்திற் சிறிதுபிரயத்தனப்பட்டார்கள். அவர்கள் அந்தவருஷத்திற் பத்துப்பெயர்களை நியமித்துக் கல்கத்தா நகரத்தைச்சுற்றி மூன்று காததூரத்தி லுள்ள கிராமங்களிலிருந்து ஸககமனஞ்செய்த புண்யவதிகளின் தொகையைக் கணக்குப்பார்த்ததில் ஆறுமாதத்திற்குள் முன்னூறு பெயர் பதிவிரதைகள் பர்த்தாவுடன் கூட உடன் கட்டையேறிச் சுவர்க்கலோகவாச இன்பத்தைக்கொள்ளை கொண்டதாகத் தெரிந்தது. அவ்வருஷமுதற்கொண்டு ‘சதி’ யென்னும் உடன்கட்டையேறலைத் துரைத்தனத்தார் நிறுத்திப் பாவங்களைக் கட்டிக்கொண்டவரைக்கும் உள்ள இருபத்தைந்து வருஷங்களிலும் எழுபதினாயிரம் விதவைகள் எங்கள் தேசத்திற் பர்த்தாவுடன் உடன்கட்டை யேறிப் புண்ணியலோகம் சென்றதாகத் துரைத்தனத்தார் கணக்கினால் தெரியவருகின்றது. அந்தக்கணக்கில் அகப்படாத ஸ்திரீகள் எத்தனையோ! இந்தக்காரணத்தால் எங்கள் தேசம் மற்றைத் தேசங்களெல்லாவற்றிலும் பரிசுத்தமானதென்றும், பதிவிரதைகள் நிறைந்ததென்றும், புண்ணிய ஸ்திரீகள் நிறைந்ததென்றும் நீங்கள் அறிந்திருக்கலாம். அந்தச்சங்கதி போகட்டும். அந்நியமதஸ்தர்களான கிறிஸ்தவர்களுடைய அற்பமுயற்சி பகவான் எங்கள் பக்கத்திலிருந்ததனால் அப்பொழுது ஒன்றும் நிறைவேறவில்லை. அதன் பிறகு ராம மோஹந ராய் என்னும் பதித னொருவன் எங்களிலிருந்தே வெளிவந்து கி-பி-1818-ம்௵ முதற்கொண்டு சககமனம் நசித்துப்போகும்படி விசேஷ முயற்சி செய்ய வாரம்பித்தான். கல்கத்தா நகரத்தில் மாத்திரம் 1815-ம்௵த்தில் 253-பேரும், 1816-ம்௵த்தில் 289பேரும், 1817-ம்௵த்தில் 442பேரும் 1818-ம்௵த்தில் 544 பேரும், 1819-ம்௵த்தில் 421 பேரும், 1820-ம்௵த்தில் 370பேரும், 1821-ம்௵த்தில் 372 பேரும், 1822-ம்௵த்தில் 328 பேரும், 1823-ம்௵த்தில்

340 பேரும், 1824-ம்வருஷத்தில் 373 பேரும், 1825-ம்வருஷத்தில் 398 பேரும், 1826-ம்வருஷத்தில் 324 பேரும், 1827-ம்வருஷத்தில் 337பேரும், 1828-ம்வருஷத்தில் 309 பேரும் மகாபதிவிரதைகள் உடன்கட்டையேறிப்பதினான்கு இந்திரர்கள் காலம்வரையில் தங்கள் பர்த்தாவுடன்கூடிச் சுவர்க்கலோக வின்பங்களை யனுபவிப்பதற்குச் சென்றார்கள். 'தெய்வம் பாவிகளுக்கே துணைசெய்யும்' என்கிற நீதிவாக்கியப்படி மதப்பிரஷ்டர்களின் முயற்சியை யநுசரித்து 1828-ம்வரு அப்பொழுது கவர்னர்ஜெனரலாயிருந்த பெண்டிங்கு பிரபு உடன்கட்டையேறுதல் கூடாதென்று நிறுத்தி ஒவ்வொரு வருஷமும் அத்தனை பெயர் பதிவிரதைகள் சுவர்க்கலோகத்துக்குப்போகவிடாது நிறுத்தின புண்ணியத்தைக் கட்டிக்கொண்டார்.

எங்கள் தேசத்தில் 1881-ம்வருஷத்தில் துரைத்தனத்தாரெடுத்த ஜனசங்கைக்கணக்கின்படி சுதேச அரசர்கள் நாட்டில் இருப்பவர்கள் நீங்கலாக ஆங்கிலேய அரசாட்சியில் மாத்திரம் 2,09,38,626 பேர் விதவைகள் இருக்கிறார்கள். இந்தக் கணக்கின்படி மொத்தத்தில் எங்கள் தேசத்தில் சராசரி ஐந்துஸ்திரீகளுக்கொருத்தி விதவையாகக் காணப்படுகிறாள். பிராமணர்களில் மூன்றுபேர்க்கொரு விதவையிருக்கலாம்.

இவ்விதமாய் நான் சொன்னவிஷயங்களைக்கேட்டபிறகு 1879-ம்வருஷத்திலேயே பரதகண்டத்தை விட்டுப்போனவெனக்கு 1881-ம்வருஷத்தில் இந்துதேசத்தில் துரைத்தனத்தார் எடுத்த ஜனசங்கையைக் குறித்து எவ்வாறு தெரிந்தது என்று எனது சத்திய சரித்திரத்தைப் படிப்பவர்கள் சிலருக்குச் சந்தேகமுண்டாகலாம். அதற்கு எல்லாரும் ஒப்புக்கொள்ளத்தகுந்த சமாதானத்தைச் சொல்லுகிறேன். கேளுங்கள். நான் இந்த 1881-ம்வருஷத்தில் ரணஉதேசத்திலிருந்து உண்

மையே. ஆனாலும் 1880-ம்வருஷத்திற் பரதகண்டத்தில் முதல்முதல் பம்பாய் நகரத்தில் திவ்யஞான சமாஜம் ஸ்தாபிக்கப்பட்டதென்றும், அதுமுதல் கூட்ஹூமீ முதலான மஹாத்மாக்கள் தூரதேசவர்த்தமானங்களைத் தெரிவித்துக் கொண்டிருந்தார்களென்றும் நீங்கள் யாவரும் அறிந்திருப்பீர்கள் அல்லவா? அப்படிப்பட்ட விஷயத்திற் புத்திமான்களான உங்களுக்கு வேறு சொல்லவேண்டியதென்னவிருக்கின்றது?

அதன்பிறகு ரண்டீநகரத்தில் முன் எப்பொழுதும் இல்லாத புருஷர்கல்வியைப் புதிதாய் ஸ்தாபிக்கும் விஷயத்தைப்பற்றி வித்துவ ஸ்திரீகளெல்லாம் சேர்ந்து சபைகூட்ட ஆரம்பித்தார்கள். அந்தச் சபையிற் பழைய வழக்கத்துக்கு விரோதமாகப் புருஷர்களுக்குக் கல்வி கற்பிப்பவர்களையும், அப்படிப்பட்டவர்களுக்குத் துணை செய்பவர்களையும் எல்லோரையும் நீக்கி மதகுருவுக்கெழுதி ஜாதிப்பிரஷ்டம் செய்யப் பத்திரிகை வரவழைப்பதென்று நிச்சயிக்கப்பட்டது. இந்தக்கலக்கத்துக்குப்பயப்பட்டு என் மித்திரனை பாடிபோட் தமக்கை அவனைப் பள்ளிக்கூடத்தி லிருந்து நிறுத்தவே எங்கள் பாடசாலைக்கெல்லாம் நான் ஒருவனே மாணாக்கனாய்விட்டேன். எனது எஜமானியாகிய பாண்டி பங்கியார் மாத்திரம் தளர்வடையாமல் தைரியத்துடன் என்னை யனுப்பிக்கொண்டுவரவே சபாபத்நியும் பட்டணத்திலுள்ள பெரியவீட்டு ஸ்திரீகளும் சேர்ந்து சபைகூட அவர்கள் அவளைப் பிரஷ்டம் செய்தார்கள். அதன்பிறகு நடந்த சரித்திரத்தை அடுத்த அத்தியாயத்தில் விவரித்துச் சொல்லுவேன்.

---

## அத்தியாயம்–7.

பிரஷ்ட பத்திரிகை வந்த பிறகும் 'பாண்டிபங்கீயார்
தமது முயற்சியைக் கைசோரவிடாமல் தமது நேசர்க
ளனைவரையும், ராஜாங்க பாடசாலையில் உயர்ந்த வகுப்
பிற் படித்துக்கொண்டிருந்த வாலிப ஸ்திரீகளையும் கூட்டிப்
புருஷர் கல்வியைப்பற்றி உபந்நியாசம் செய்யவாரம்பித்
தார். அவர் உபந்நியாசங்களாலும் ராஜாங்கபாஷை நூல்
களின் மகிமையாலும் மனது உருகின சில சிறுமிகள் எவ்
வளவு துன்பம் நேரிடினும் பொறுத்துப் புருஷர் கல்வியை
அபிவிருத்தி செய்வதற்கு நிச்சயம் செய்துகொண்டு என்
எஜமானிக்கு எல்லா விதத்தாலும் உதவிசெய்து ஜாதி
பிரஷ்டம் செய்யப்பட்டிருந்த அவளோடுகூட இரகசிய
மாய்ப் போஜனம் செய்யவும் ஆரம்பித்தார்கள். அதனால்
ரண்டி நகரத்தில் ஒரு பெரிய மனக்கலக்கமுண்டாயிற்று.
ராஜபாஷையினால் பிள்ளைகள் கெட்டுப் போகிறார்களென்
றும், அவர்களெல்லோரையும் ராஜாங்க பாடசாலைக்கு
அனுப்பாது நிறுத்தி அவர்களுக்கு ரண்டி மதத்தைப்போ
தித்து அவர்களுக்குப் பழைய வழக்கத்திற் பிரியம் உண்
டாகும்படி செய்யவேண்டுமென்றும், வித்துவ ஸ்திரீக
ளெல்லாம் வாரத்துக்கு இருமுறை, சிறுமிகளுக்கு மத
போதனை செய்யவேண்டுமென்றும், லௌகிக விவகாரங்க
ளிலும் உத்தியோகங்களிலும் மேம்பட்டவர்களாய்ப் பிர
சித்தி பெற்றவர்கள் அனைவரும் நிச்சயம் செய்துகொண்டு
சபைகள் சேர்த்தும், தங்கள் கிராமத்துக் கொருதரம்
வந்து தினமும் குறைந்த் ஸ்திதியை யடைந்துகொண்டிருக்
கிற மதத்தை நிலைநிறுத்த வேண்டுமென்று குரு பீடங்
களுக் கெல்லாம் மேலான ஜகத் குருவுக்கு விஞ்ஞாப
னம் செய்துகொண்டார்கள். புது நாகரிகத்தைக் கொண்
டாடுபவர்களுக்கு எங்கள் எஜமானர் தலைவர் போலவே

பழைய வழக்கத்தையே அநுசரித்துவரும் பழைய நாகரிகர்களுக்குத் துண்டீலண்டியார் எஜமானராய்த் தமது சக்தி முழுமையும்உபயோகித்துப்புதுநாகரிகபட்சமுள்ளவர்களை முக்கியமாய் அந்தக்கட்சியைச்சேர்ந்தசிறுமிகளை வருத்திப் பழைய வழக்கத்தை ஸ்தாபிக்க வாரம்பித்தார். துண்டீலண்டியார் அந்தப் பட்டணத்திற் பெரிய நியாயாதிபதி. ராஜாங்க உத்தியோகத்திலிருப்பதனால் நவநாகரிகர்களிடத்திற் பிரியர்களான துரைத்தனத்தாருக்கு விரோதமாய்க் காரியங்களை நடத்தப் பிரியமில்லாதவளாய்த்தான் கொண்ட கபடநாடகத்துக்குச்சூத்திரதாரியாயிருந்து அவள் அப்பட்டணத்தில் விசேஷ கர்மிஷ்டரென்று பிரசித்திபெற்ற கம்பி தம்பியாரை அக்கிராசனாதிபதியாக நியமித்தாள். இந்தக் கம்பிதம்பியார் உலகத்திலுள்ள கர்மிஷ்டர்களெல்லாரிலும் சிரேஷ்டர். அதிகாலையிலேயே ஸ்நாநம் செய்து நாசித்துவாரத்தை மூடிக்கொண்டு உட்கார்ந்து தினமும் பகல் இரண்டு சாமம் வரையில் இலந்தங்கொட்டைகளாற் செய்த ஜபமாலையை உருட்டிக்கொண்டு ஜபம் செய்துகொண்டிருப்பார். நமது தேசத்தில் ருத்திராக்ஷம் போலவே அந்தத் தேசத்தில் இலந்தங் கொட்டைகள் மிகப் பரிசுத்தமானது. இங்குப்போலவே அங்கு ஜனங்கள் தேகத்தில் விபூதி தரிக்கமாட்டார்கள். நமது தேசத்திற்போல மூன்று ரேகைகள் (கோடுகள்) இல்லாது ஒரே ரேகையாக நெற்றியில் அங்கும் ஒருவித மண்ணைப் பூசிக்கொள்வார்கள். அதிற் செம்மண் விசேஷ சுத்தமானது. அது கிடையாத பட்சத்தில் ஆற்றுமண்ணும் அஃது இல்லாதபட்சத்தில் ஏரி மண்ணும் அதுவுமில்லாதுபோயிற்கிணற்றுமண்ணும் மற்று எந்தமண்ணுமானாலும் தரித்துக்கொள்ளலாம். நமது கம்பிதம்பியார் நெற்றியில் மாத்திரமேயல்லாமல் தேகமுழுமையும் சிவப்பு மண்ணையே பூசிக்கொண்டு புஷ்பங்கள் மலர்ந்துள்ள முருங்கைமரம் போலக்கண்களிப்பாகக் காணப்படு

வாள். அவளுக்குள்ள பக்தியை இவ்வளவு என்று சொல்ல முடியாது. பகவானுக்கர்ப்பிதம் செய்யாமல் அவள் எதுவும் செய்யமாட்டாள். அவள் பகவானுக்கு நிவேதனம் செய்யாமற் கள்ளுங் குடிப்பதில்லை, மாமிசங்களையுந் தின்பதில்லை. பகவானுக் கர்ப்பிதம் செய்யாமல் திருடுவதுமில்லை. ஆயிரமென்னத்திற்கு! அவள் தன் தேகத்தையும் பகவானுக்குச் சமர்ப்பித்தே விபசாரஞ் செய்வாள். தன்நாக்கைப் பகவானுக்கு அர்ப்பணம் செய்தே பொய்யையும் சொல்வாள். நான் என்னும் அகப்பற்றுச் சிறிதேனுமில்லாத கர்மநிஷ்டர்கள் நமது தேசத்தில் 'தத்ஸத் பிரம்மார்ப்பணமஸ்து' என்று எல்லாக் கர்மங்களையும் பிரம்மார்ப்பணம் செய்யும் மாதிரியாகவே அவளும் தன் கர்மங்களெல்லாவற்றையும் தன் தேவதைக்குத் தாரைவார்ப்பாள். ஆகையால் அவள் இந்த வேலையைத் தன்இஷ்ட தேவதைக்குப் பிரீதி செய்வதற்கே தீட்சைவகித்தமையால் தன்எண்ணம் நிறைவேறுவதற்காக விரோதிகளின்விஷயத்தில் அவ்விதக்கொடிய கிருத்தியங்கள்செய்வதற்கும் பாவமென்கிறபயம் அவளுக்கு இல்லை. ஆயினும், துரைத்தனத்தா ரிடத்திற் பயமிருந்ததால் உள்ளுக்குள்ளேயே எத்தனை தகாத காரியங்களைச் செய்யினும் அந்தப் பட்சத்தார் பிரத்தியட்சமாய் எதிரிகளின் தலையை வெட்டுவதான குரூரத்தொழில் மாத்திரம் செய்யமுயலாது இருந்தனர். சர்க்கார் உத்தியோகத்திலிருந்த ரண்டி நகரவாசிகள் அநேகருக்கு இன்னொருகஷ்டங்கூட உண்டாயிற்று. அவர்கள் ஒருசாரார் உண்மையினிடத்திற் பிரியப்படுபவர்களான நவநாகரிக சிரோமணிகளாய் விட்டதாக நடித்துத் தங்கள் மேலதிகாரிகள் மெய்ச்சும்படி நடந்துகொள்ளவேண்டும். மற்றொருசாரார் பூர்வ மதாசாரத்தில் அபிமானமுள்ளவர்களாய் நடித்து மூடஜனங்களைச் சந்தோஷிப்பிக்கவேண்டும். மேலும் தங்கள் இருதயமெல்லாம், நவ

நாகரிகர்கள் பட்சமேயிருத்தலினாற் சீர்திருத்தங்களை மெதுவாய் நிலைப்படுத்துவதற்காகவே மேலுக்குப்பழைய ஆசாரத்தை அநுஷ்டிப்பதாக நடக்கவேண்டியதா யிருக்கிறதென்று நவநாகரிகஸ்திரீகளுக்குச் சமாதானம் சொல்லவேண்டும். ஆகையால் இவர்கள் நாடகத்தில் நடிக்கும் கூத்தன்போல் மூன்றிடங்களில் மூன்றுவிதமாக வேஷங்கள்போட்டுக்கொண்டு ஒன்றற் கொன்று நேர்விரோதமான மூன்றுகதைகளைச் சொல்லி அவரவர்களைக் கேட்கும்படி செய்யவேண்டிய சாமர்த்தியத்தை வகித்தவர்களானார்கள். இவர்கள் ஒன்றிலும் நம்பிக்கையில்லாதவர்களாய் துரபிமான மென்கிற தேவனையும் துர்ச்சிந்தையென்கிறதேவியையும் பக்தியுடன் துதிப்பவர்களாய் அவற்றின் பிரீதிக்காக அவர்கள் சிரத்தையுடன் செய்தவை யெல்லாம் சாதுக்களுக்குத் தீங்கை விளைத்தனவே தவிர வேறொன்றையும் உண்டாக்கவில்லை.

வீட்டில் தாய்தந்தையர்கள் தமது புத்திரிச் சிறுமிகளை வருத்தி, புருஷர்கல்வி நல்லதென்று சொன்னாலும் நல்லதென்று கூறுபவர்கள் கட்சியிற் சேர்ந்தாலும் வீட்டை விட்டு வெளியில் தள்ளிவிடுவோமென்று அவர்களைப் பயமுறுத்தினதனால் அவர்களிற்பலர் வாதம்செய்வதையும் நவநாரிகர்களோடு பேசுவதையும் நிறுத்திவிட்டார்கள். சிலதாய்மார்கள் அவ்வளவோடிராமற் பாடங்களை நிறுத்திவிட்டுப் பஞ்சகாலங்களிலும் "மிதா" செய்யவேண்டியதென்று சிறுமிகளை நிர்ப்பந்தஞ் செய்ய வாரம்பித்தார்கள். "மிதா" என்றால் நமது தேசத்திலுள்ள சந்தியாவந்தனத்தை யொத்தநித்தியகர்மம். இந்த நித்தியகர்மத்தை ஒவ்வொரு ஸ்திரீயும் ப்ராதகாலம், பூர்வாந்நம், மத்தியாந்நம், அபராந்நம், சாயங்காலம் என்கிறபஞ்சகாலங்களிலும் தப்பாது செய்யவேண்டும். அதுசெய்யாதவர்களுக்கு நற்கதிகிடையாது; என்றாலும் பட்டணத்திலுள்ள

வர்கள் மிதா செய்வதாகச் சிலர் நடித்தபோதிலும் நிஜமாகச் செய்கிறவர்கள் மாத்திரம் இல்லை. தாய்தந்தையர்களுடைய தொந்தரை அதிகமானபொழுது சிறுமிகள் ‘மிதா’ சொல்லிக்' கொடுக்கும்படி தங்கள் தாய்மாரைக் கேட்கவாரம்பிக்கவே, அவர்கள்தங்கள் குட்டு‘மர்மம்’ வெளிப்பட்டுப்போகாதபடி முதல் முதலிற் கோபத்தை யடைந்து பிறகு தங்களுக்கு ஒழிவில்லை யென்று உபேட்சைசெய்து, செய்யாமற் போய்விட்டாலும் மிதா செய்கிறோமென்று சொல்லிச் சமமன்தரித்துக் கொண்டால்மாத்திரம் போதுமென்று சொன்னார்கள். இன்னும் கொஞ்சம் ஜனங்கள் தாங்கள் மிதா கற்றுக்கொள்ள வேண்டுமென்று புரோகித ஸ்திரீயைக் கூப்பிட்டுக் கேட்டார்கள். புரோகித ஸ்திரீயும் சிறிது நேரம் ஆலோசித்துத் தன் நிமித்தமாக நாட்டுப்புறத்திலுள்ள தன் தங்கை மிதா செய்துகொண்டிருக்கிறபடியால் பட்டணத்தில் வாடிக்கையில்லாததைத் தான் கற்றுக்கொள்ள வேண்டிய அவசியமில்லாமற் போயிற்றென்றும், பட்டணத்தில் உபயோகமான அர்த்த சாஸ்திரத்தை மாத்திரமே, தான் அப்பியசித்ததாகவும், தகுந்தபொருள் கொடுக்கும் பட்சத்திற் கிராமத்தினின்று தன் தங்கையை வரவழைப்பதாகவும் சொன்னாள். சூரிய கிரணங்களின் உஷ்ணத்தினாலே ஏரியிலுள்ள தண்ணீர் ஆக்கிரஷிக்கப்படுவதுபோலப் பொருள் என்றபேரைச் சொன்னதும் அவர்கள் மனதாகிற தடாகத்தில் ஊறிக்கொண்டிருந்த “மிதா” கற்றுக்கொள்ளவேண்டுமென்கிற அபிலாஷைப் பிரவாகம் உலர்ந்து போயிற்று. அர்த்த சாஸ்திரம் என்றால் உங்களிற் சிலருக்குத் தெரியாதிருக்கலாம். தாரமிழந்தவர்கள் முதலானவர்களிடத்தில் நோன்பு. விரதம் முதலானவைகளைச் செய்வித்து அவர்களிடமிருந்து தனத்தைக் கிரகிக்கும் சாஸ்திரத்துக்கே அர்த்தசாஸ்திர மெனப் பெயர்.

புருஷர்கலவிக்கு ஆதாரமாக, “காதா” என்னுஞ்சொல்

ஷ்டப்படியும் அவர்கள் வேதத்திற் பிரமாண மிருக்கிறதென்று நவநாகரிக ஸ்திரீகள் எங்கிருந்தோ ஒரு வசனங் கொண்டு வந்தார்கள். 'யதா' வுக்குப் போலவே "ததா" வுக்கு அர்த்தமே யில்லை யென்றும், இருந்தாலும் வேதம் தேவபாஷையா யிருந்தலால் அதன் அர்த்தம் தேவர்களுக்கேயன்றி மனிதர்களுக்குத் தெரியாதென்றும், அதனால் முன்னாட்களிற் புருஷர்கல்வி உண்டென்று வேதப் பிரமாணத்தைக் காண்பித்தவர்களின் வார்த்தை அங்கீகாரம் செய்து கொள்ளக்கூடியதல்லவென்றும், புண்ணியத்தை விரும்பி வேதமந்திரத்தைச் சும்மா கர்மம் முதலானவற்றில் உச்சரிக்க வேண்டியதேயன்றி அதன் அர்த்தத்தைப்பற்றி ஆலோசிக்கவேண்டிய வேலையில்லை யென்றும், வித்துவத் ஸ்திரீகள் வாதிக்க ஆரம்பித்தார்கள்.

அந்த வாதத்திற் பண்டிதை ஸ்திரீகளுக்குள் வேதத்துக்குப் பொருள் உண்டா இல்லையா என்று ஒரு தர்க்கமிடையென்று நேரிட்டது. அப்பொழுது பண்டிதை ஸ்திரீகளுள் முக்கால்வாசிப்பேர் வேதத்துக்கு அர்த்தமேயில்லையென்றும், அர்த்தம் இருந்தாகத் தாங்கள் எப்பொழுதும் பெரியவர்கள் சொல்லக்கேட்டதில்லையென்றும், அர்த்தம் இருந்தபட்சத்தில் ஜனங்கள் ஒருவராவது ஏன் அப்பியசிக்கவில்லை யென்றும், அர்த்தம் இல்லாதிருந்ததினாலேயே அதற்கு அந்தமகிமை வந்ததென்றும், வாதித்து அர்த்தம் இல்லையென்றே சித்தாந்தம் செய்தார்கள்; சொற்பங்கு மாத்திரம் அக்காலத்திலிருந்த மனிதர்களுக்குள் யாருக்கும் தெரியாது போய்விட்டாலும் வேதத்துக்கு அர்த்தம் உண்டென்றும், வேதத்துக்கு அர்த்தம் உள்ளதென்றுந் தங்கள் பாட்டன், முப்பாட்டன் தங்களிடஞ் சொன்னதாகத் தங்கள் பாட்டன் தாங்கள் சிறுவர்களாயிருக்கையிற் சொல்லக் கேட்டதாகவும், வேதத்தின் அர்த்தமே சாஸ்திரமென்று சாஸ்திரத்திற் சொல்லப்பட்டிருக்கின்றதாகவும்

வாதித்தார்களென்றும், வெகு பேருள்ள கட்சியில் அவர்கள் வாதம் ஏறுதுபோயிற்று. அந்தச்சபையில் நவநாகரிக ஸ்திரியான ஒருத்தி யெழுந்து நின்று துரைத்தனத்தார் நமது பழைய கிரந்தங்களைச் சேகரிப்பதற்குப் பிரயத்தனம் செய்கிறார்களென்றும், ஒரு பழைய தேவாலயத்தில் மூலையில் விழுந்துகிடந்த செல்லரித்துப் போன ஓலைச் சுவடிகள் கட்டையவிழ்த்துச் சோதிக்குங் காலையில் அதில் வேதத்துக்கு வியாக்கியானம் (அர்த்த புஸ்தகம்) ஒன்று காணப்பட்டதாகவும், அவர்கள் அதைப் பரிசோதித்து அச்சுப்போடுகிறார்களென்றும், வேதத்துக்கு அர்த்தமுள்ளதென்றும் சொன்னாள். அவள் வார்த்தையை வித்வத் ஸ்திரீகள் ஒருவரும் நம்பாது சுகேச ஸ்திரீகள் ஒருவருக்குங் கிடையாதபுஸ்தகம் அவர்களுக்குமாத்திரம் கிடைத்திராதென்றும், கிடைத்தாலும்வித்வத்ஸ்திரீகளுக்கு அர்த்தம் ஆகாதது அவர்களுக்கு ஆகுமென்று நம்பக்கூடாதென்றும், தேவாலயத்திலுள்ள பழையபுத்தகங்களிலுள்ளதென்று சொல்லி ஏதோ ஓர் அர்த்தத்தைக் கற்பித்து அச்சுப்போடுகிறார்களென்றும், அச்சுப்போட்ட கிரந்தங்களைத் தொட்டாலும் பாவம் வருமாகையால் அதை வாங்கினவர்களையும் படித்தவர்களையும் ஜாதிப்பிரஷ்டம் செய்வதற்குச் சீக்கிரத்திலேயே பட்டணத்துக்கு விஜயம் செய்யப் போகிற ஜகத்குருவைப் பிரார்த்திக்கவேண்டுமென்றும் எல்லோரும் ஒரேவார்த்தையாக நிச்சயம் செய்தார்கள்.

இப்படிச் சபைகள் நடந்துகொண்டிருக்கையிலேயே ஜகத்குரு தாம் எழுந்தருளப்போவதாக சபாபதிமார்களுக்குத் திருமுகம் அனுப்பினார். திருமுகத்தின் பின்னாலேயே அந்த ஜகத்குருவும் குதிரைகளோடும் யானைகளோடும் வாத்தியங்களுடனேயும் விஜயம் செய்தார். அப்பொழுது ஒவ்வொரு வீட்டிலும் அவருக்குப்பிக்ஷைகள்செய்ய ஆரம்பித்தார்கள். உத்தியோகத்திலிருந்தவர்கள் ஒவ்வொருவ

ரும் மும்மூன்றுமாதச் சம்பளம் பாதபூசை சமர்ப்பிக்கவேண்டிவந்தது. அப்பொழுது ஒவ்வொரு வீட்டிலும்நாசிகாமகோத்ஸவம்நடக்க ஆரம்பித்தது. அந்த நாசிகோத்ஸவத்தில்முதல்முதல் எனதுபள்ளித்தோழனுகியபாடிபோட்என்பவனது மூக்கு மூளியாய்ப் போயிற்று. வேறு காலங்களிற்பற்று இல்லாது போய்விட்டாலும் சுவாமிகள் எழுந்தருளியபோது நமது தேசத்திற் பால்ய விதவைகளின் தலைமயிரை எடுத்துவிடுவதுபோல அத்தேசத்தில் ஜகத்குரு வந்தபொழுது தாரமிழந்தவர்கள் அனைவர் மூக்கையும் அறுத்தெறிவார்கள். ஜகத்குரு அங்கிருந்த காலத்தில் ஒருசபைகூடி அந்தச்சபைக்கு என் எஜமானியாகிய பாண்டிபங்கீயாரையுங் கூட வரவழைத்தார்கள். அப்பொழுதுபுருஷர்கல்வி கூடாதென்று எந்த சாஸ்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிறதென்று பாண்டிபங்கியார் ஜகத்குருவைப்பிரஸ்னை கேட்டார். நித்தியம் அதிகமாய்ப் பிட்சைசெய்தபடியால் ஜகத்குரு அவர்களுக்கு மாவு முதலிய பண்ணியார வகைகளின் பெயரே தவிரப்புத்தகங்களின்பெயர் ஒன்றுந்தெரியாதானபடியால், அந்தப் பிரச்னைக்குப்பதிற் சொல்லவேண்டுமென்று அவர்கள்மடத்துவித்துவஸ்திரீகளானசிஷ்யஸ்திரீகளுக்கு ஆக்கியாபித்தார். அம்மகாவித்வஸ்திரீகளெல்லோரும சிறிதுநேரம் ஆலோசித்துத் தாங்கள்தங்கள் மடத்திற்குப் போனபிறகு மூலபாடத்திலிருந்தஅநாதியான கிரந்தத்தை எடுத்துப் புத்தகங்களின்பெயரைஅனுப்புவிக்கிறோமென்று சொல்லித் தப்பித்துக்கொண்டார்கள். குடியர்களுக்கும் மாம்சந் தின்பவர்களுக்கும்,விபசாரிகளுக்கும ஜாதிப்பிரஷ்ட மில்லாமல், உலகத்தின்அபிவிருத்தியின் பொருட்டு முயற்சி செய்கின்றதமக்குக்காரணமில்லாமல் ஜாதிப்பிரஷ்டஞ் செய்ய என்ன நியாயமிருக்கிறதென்று என் எஜமானியார் பயப்படாது ஜகத்குருவைக் கேட்டார். அப்பொழுது அந்த ஆஸ்தானபண்டி

தஸ்திரீகளில் ஒருவிருத்தஸ்திரீ முன்வந்து சாஸ்திரோக்தப் பிரகாரம் நடந்து வருபவர்களை என் ஜாதிப்பிரஷ்டம் செய்யவேண்டுமென்றும்

மாகே மாகே மாடே மாடே
மாபே மாமே மிமே மிமே.

என்கிறசாஸ்திரப் பிரமாணத்தினல் மேற்சொன்ன காரியங்களைச் செய்தவர்கள் பாவம் செய்தவர்களாகார்களென்றும் சமாதானம் சொன்னாள். அந்தப்பிரமாண வசனத்துக்கு அர்த்தமென்னவோ சொல்லவேண்டுமென்று நான் வேண்டிக் கொண்டமையால், அம்மகாபண்டிதஸ்திரீ எனமீது தயைபுரிந்து "மத்யம், மாம்சம், மத்ஸ்யம், முத்திரை, மைதுனம், என்கிற மகர முதலெழுத்தாயுள்ளவைகள் மகாபாவங்களைப் போக்குவன" என்று சொன்னாள், இந்த வசனத்தோடே,

மத்யம் மாம்ஸஞ்ச மத்ஸ்யஞ்ச முத்ரா மைதுனமேவச
மகார பஞ்சகஞ்சைவ மகா பாதக நாசனம்"

என்கிற 'ப்ராணிதோஷிணி' என்கிற கிரந்தத்திலுள்ள சுலோகம் என் ஞாபகத்துக்கு வந்து ரண்டு. சாஸ்திரமெல்லாம் இந்து சாஸ்திரத்திலிருந்தே எடுக்கப்பட்டன வென்றும் அவர்கள் வேதமும் நமது வேத சாகையே என்றும் நான் நிச்சயம் செய்துகொண்டேன். அப்பொழுது நியாயத்துக்கு விரோதமான சாஸ்திரம் எவ்வாறு பிரமாணமாகுமென்று என்எஜமானியார் அந்த வித்வத்ஸ்திரீயைச் சிறிதும் அச்சமின்றிக் கேட்டாள். அதன்மீது அவள் மிகக் கோபாக்கிராந்தையாய்ச் சாஸ்திரங்களை அலட்சியாகப்பேசினமையால் இன்னொரு ஜாதிப்பிரஷ்டபத்திரிகை அனுப்புவேன் என்று பயமுறுத்தி, அப்படிப்பட்ட நாஸ்திகஸ்திரீயின் முகத்தைப் பார்த்தாலும் பாபம்வருமென்று கோபம் மூண்டு, இந்த அனர்த்தங்களெல்லாம் ராஜாங்கபாடசாலை

யிற் படித்ததனுல் வந்தன, ஆதலின் துரைத்தனத்தார் பாட சாலைக்குச் சிறுமிகளை அனுப்புபவர்கள் எல்லோருக்கும் தகுந்தசிக்ஷிக்க வேண்டுமென்று ஸ்ரீமத் ஜகத்குருவி னிடம் மனுவுசெய்துகொண்டு அந்தக்ஷணமே என் எஜ மானியாரைக்குருசமுகத்தினின்று அப்புறப்படுத்தினுர்கள். ஜகத்குரு அவர்களும் தனலட்சிமியினிடத்திற் பிரியமுள் ளவராயிருந்தமையாற் சிஷ்யை வார்த்தையைக் கொண்டு துரைத்தனத்தார் பாடசாலைக்குச்சிறுமிகளையனுப்புபவர்க ளெல்லோரும் தலைக்குப்பத்துப்பொன் அபராதம் செலுத் தவேண்டுமென்றும், செலுத்தும் வரையிற் கிராமத்திலுள் ளவர்கள்யாரும் அவர்கள்வீட்டிக்குச் சுபாசுபகாரியங்களுக் குப் போகக்கூடாதென்றும், அப்பொழுதே சபாபத்நிகள் பேருக்குத்திருமுகம் அனுப்பினுர், ஆயினும் சபாபத்நி களது புத்திரிகள்கூடச் சிலர் ராஜபாஷையைப் படித்துக் கொண்டிருக்கிறவர்களானமையால் அவர்கள் அந்தத்திரு முகத்தை அவ்வளவாய்ப் பாராட்டவில்லை. இவ்வளவுக் கும் ரண்டீ நகரத்திலே அந்த ஜகத்குருவின் சிஷ்யகுடும் பங்கள் அனைவரும் சேர்ந்து நூறுதாம் இருந்தன. ஆனுல் அம்மதத்தை அநுசரிப்பவர்கள் நிரம்பப்படித்தவர்களா யும், தனிகர்களாயும் செல்வாக்குள்ளவர்களாயுமிருக்கிறுர் கள். இந்த ஜகத்குருபீடத்தை ஸ்தாபித்தவளான ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ ஆதி ஜண்டா முண்டா ரண்டா தேவியார் முன்காலத்தில் எப்பொழுதோ பதினுறு மதங்களை நிலைப்படுத்தினவரான மையால் அப்பீடத்துக்கு வந்தவர்கள் அனைவருக்கும் "ஷோடசமதோத்தாரணி" என்கிற விருது பரம்பரை யாய் வந்து கொண்டிருக்கிறது. அதனுல்தான் அந்தப் பீடத்தார் தாங்கள் ஜகத்குருவென்றும் மற்ற எல்லா மதஸ் தர்களும் தங்களுக்குச் சிஷ்யர்களைப்போலவே ஆகிறுர்க ளென்றும் சொல்லிக்கொள்வார்கள். அம்மதங்களின்பெயர் களனைத்தையும் தெரிவிப்பதனுல் எனக்கு வீண்பிரயாசை

யேயொழிய அதனால் தங்களுக்கு ஒன்றும் இலாபமில்லை. இப்படிப்பட்ட விருதுகள் அந்தத்தேவியாருக்கு மூவ்வாயிரத்து மூந்நூற்று முப்பத்து மூன்று உண்டு. அந்தத்தேவியார் பதினாறு மதங்களையும் நிலைநிறுத்தியிருந்தாலும், அவைகளிலெல்லாம் ஜண்டாமதமே சர்வோத்தமமானதென்று ஸ்தாபித்தார்கள். அந்தமதசித்தாந்தங்கள் சற்றேறக்குறைய நமது தேசத்திலுள்ள சாக்தேய மதசித்தாந்தத்தைப் போலிருக்கின்றன. அவற்றிற்கும் இதற்குமுள்ள வித்தியாசமெல்லாம் நம்மதிலுள்ள ஸ்திரீயை எடுத்துவிட்டு அவர்கள் அதற்குப்பதிலாக அந்த இடத்துக்குப் புருஷனைவைத்துக் கொண்டார்கள். அதிலேயும் கட்குடித்தல் உண்டு; மாமிச பட்சணமும் உண்டு; சம்போகமுமுண்டு; முத்திரையுமுண்டு; இவைகளையெல்லாம் ஆலோசித்துப்பார்த்தால் அவர்கள் தங்கள் சாஸ்திரத்தை நமது ஆகம தந்திரங்களினின்று திருடிக்கொண்டதாகத் தோன்றுகின்றது. நமது முத்திரைகளிலெல்லாம் முக்கியமான "ஹ்ஸ" என்னும் ப்ராஸாதமுத்திரையையும் ஸ்ரீசக்ரத்தையும் அவர்கள் எடுத்துக்கொண்டமையால் அவர்கள் தம்மதத்தை யெல்லாம் நமது ஐந்தாம் வேதமான தந்திரத்திலிருந்தே திருடிக்கொண்டார்களென்பது நிச்சயம். அப்பொழுது வந்த அந்தஜநத்துக்கு நுவக்குவயது முப்பதிருக்கும். அந்தத்தேவியார் உருவத்திலும் வெகு அழகுள்ளவளென்றே சொல்ல வேண்டும். அவள் தினந்தோறும் ஜண்டா பூஜைசெய்வாள். இந்த (உபாஸனை)ப் பூஜை, ஸ்திரீக்குப்பதிலாக புருஷனை வைக்கும் பட்சத்தில், எல்லாவிஷயங்களிலும் நமதுதேசத்தில் வீரர்கள் என்று சொல்லப்படும் மகா பக்திசிரோமணிகள் செய்கின்ற உபாஸனையை ஒத்திருக்குமாதலால் உங்களுக்குத் தெளிவாகத் தெரியும்பொருட்டு நமது உபாஸனையை இங்குப் பிரமாண வாக்கியங்களுடன் சிறிது விவரிப்பேன. சாக்தேய ஆசாரங்களிலுள்ளதாகிய இது வாமா

சாரம்; இதை ஆசரிப்பவர்கள் கௌலிகர்கள் எனப்படுவார்கள். கௌலிகர்களென்றால் உத்தம குலத்தவர்களென்று அர்த்தம். இந்தப் பதத்தினாலேயே இவர்களது விசேஷத்தன்மை தெளிவாய்த் தெரிந்தாலும் பிரமாணவாதிகளாகிய உங்கள் திருப்திக்காகச் சிறந்த பிரமாணமான சாமாரகஸ்ய தந்திரத்தினின்று வாமாசாரத்தினுடையவும் கௌல சித்தாந்தத்தினுடையவும் மேன்மையை ஸ்தாபிக்கும்பிரமாணங்களை இங்கு உதாரணமாகக் காட்டுவேன்.

ஸர்வேப்யச்சோத்தமா வேதா வேதேப்யோ வைஷ்ணவம் பரம்.
வைஷ்ணவாதுத்தமஞ் சைவம் சைவாத் தக்ஷிண முத்தமம்.
தக்ஷிணாதுத்தமம் வாமம் வாமாத் சித்தாந்த முத்தமம்.
சித்தாந்தாதுத்தமம் கௌலம் கௌலாத் பரதரம் நஹி.

"எல்லாவற்றுள்ளும் வேதங்கள் உத்தமமானவை; வேதங்களைக்காட்டிலும் வைஷ்ணவம் உத்தமம். வைஷ்ணவத்தைக்காட்டிலும் சைவம் உத்தமம். சைவத்தைக்காட்டிலும் தக்ஷிணாசாரம் உத்தமம். தக்ஷிணாசாரத்தைக்காட்டிலும்வாமாசாரம் உத்தமம். வாமாசரத்தைக்காட்டிலும் சித்தாந்தம் உத்தமம். சித்தாந்தத்தைக்காட்டிலும் கௌலம் உத்தமம். கௌலத்தைக் காட்டிலும் சிரேஷ்டமானது வேறொன்றுமில்லை" என்று மேற்கூறிய பிரமாண சுலோகங்களுக்கு அர்த்தம். இப்பொழுது கௌலத்தினது மேன்மை ஸ்தாபிக்கப்பட்டமையால், கௌலாசாரத்தைப் பிரமாணத்துடன் 'சக்திசோதன தந்திரத்'திற் சொல்லப்பட்ட விதமாய்ச் சிறிது விவரிப்பேன்:—

நடீகாபாலிநீ வேச்யா ரஜகீ நாபிதாங்கநா
ப்ராஹ்மணீ சூத்ரகந்யாச ததா கோபாலகந்யகா
மாலாகாரஸ்ய கந்யாபி நவகந்யா: ப்ரகீர்த்திதா:
ஏதாஸு காஞ்சிதாநீய பூஜயேத் சக்திகௌலிக:
* * * *
மஹாநிசாயா மாநீய நவகந்யாச்ச பைரவாந்
* * * *

ததீயமந்த்ரமாலிக்ய தஸ்மிம்ஸ்தாமேவ பூஜயேத்
ஸ்ரீசக்ரே ஸ்தாபயேத் வாமே கந்யாம் பைரவ வல்லபாம்
முக்தகேசாம் வீதலஜ்ஜாம் ஸர்வாபரண பூஷிதாம்
ஆநந்தலீந ஹ்ருதயாம் ஸௌந்தர்யாதி மநோஹராம்
ஸோதயேத் சுத்திமந்தரேண ஸுராநந்தாம்ருதாம்புபிஃ

* * * * *

ஆநந்ததர்பிதாம் காந்தாம் வீரஃ ஸ்வாநந்தவிக்ரஹஃ
ரதேந தர்பயேத் தத்ர ஸ்ரீசக்ரே வீரஸம்ஸதி.

* * * * * *

பீத்வா பீத்வா புநஃ பீத்வா யாவல்லுடதி பூதலே
உத்தாயச புநஃ பீத்வா புநர்ஜந்ம நவித்யதே.

சபையிற் சொல்லத் தகாதனவாயிருக்கு மென்று இன்னும் சில பிரமாணவசனங்களை இடையிடையே விட்டதற்காக இதைப் படிப்பவர்கள் என்னை மன்னிக்கவேண்டும்.

“நடிப்பவள், காபாலிநி, வேசை, வண்ணாத்தி, அம் பட்டச்சி, பிராமணத்தி, சூத்ரச்சி, இடைச்சி, பூமாலைவிற் பவள், இவர்கள் ஒன்பதுபேருக்கும் நவகன்னியர்க ளென் று பெயர். இவர்களில் ஒருத்தியை அழைத்துக்கொண்டு வந்து கௌலிகன் சக்திபூஜை செய்யவேண்டும். நடுராத் திரியில் நவகன்னியர்களை அழைத்து வந்து............ .. அதன் சம்பந்தமான மந்திரங்களை வரைந்து அவளைப் பூஜிக்கவேண்டும். ஸ்ரீசக்ரத்தின் இடது பக்கத்தில் தலை யை விரித்துக்கொண் டிருக்கிறவளும், நிர்வாணமுள்ளவ ளும், சர்வாபரண பூஷிதையும், இன்பத்தின் வயப்பட் ட இருதயமுள்ளவளும், சௌந்தர்யத்தால் மனதைக் கவர் கின்றவளுமான அந்த “பைரவி” கன்னிகையை நிறுத்திச் சாராய மென்னப்படும் அமிர்த தீர்த்தத்தைக் கொண்டு சுத்தி மந்திரத்தினால் அவளைப் பரிசுத்த முள்ளவளாகச் செய்யவேண்டும். ஆநந்த வடிவமுள்ள வீரன் இன்பத்தி னால் திருப்தியடைபவளான அவளை ஸ்ரீசக்ரத்தில் ரதிபி

ஞற் சந்தோஷிப்பிக்க வேண்டும். குடித்துக் குடித்து, கீழே விழும்வரையில் மறுபடியும் குடித்து எழுந்து மறுபடியுங் குடித்து மறுஜன்மமில்லாதவனாவான்" என்பது மேற்சொன்ன பிரமாணசுலோகங்களின் கருத்து. இப்படியாகவே அத்தேசத்து ஜகத்குருவும் நடுராத்திரியில் ஸ்ரீ சக்ரத்தில் ப்ராசாத முத்திரையைத்தரித்து ஈசுவரவடிவாய் ஒரு வாலிபப் புருஷனைப் பூஜித்துச் சமபோகித்து, சுராபானம் செய்து ஆநந்த பரவசராவராம்! நமது தேசத்திற் போலவே அந்தத்தேசத்திலும் சாஸ்திரத்தில் நம்பிக்கையும், மததர்மங்களை அநுஷ்டித்தலும் குறைந்துவருகின்றமையால் ஜகத்குரு இந்த மததர்மத்தைத் தானே அநுஷ்டித்துக் காட்டும்வரையில் அதை ஜனங்கள் மறந்துவிட்டதாகவே யிருக்கின்றமையால், நான் அங்கிருந்தகாலத்தில் ரண்டி நகரத்தில் இந்த ஆசாரம் காணப்படவே யில்லை. இது கலிகாலமகிமையென்பது குருவின் அபிப்பிராயம்.

ப்ராசாத மந்திரத்தின் மகிமை, மந்திரத்தில் நம்பிக்கையில்லாத நவநாகரிகர்களுக்குத் தெரியாதிருக்குமாதலால் அவர்களுக்காக இங்குப் பிரமாணத்துடன் 'குலார்ணவதந்திர'த்தினின்று காட்டுகின்றேன். இதைப் பற்றியே நான் சொல்வது அப்பிரமாணமான வாதமன்றென்றும், எல்லாஜனங்களும் அங்கீகரிக்கத் தகுந்ததென்றும் புத்திமான்கள் அறிந்துகொள்ளக்கூடும்.

ஸ்ரீப்ராஸாத பராமந்த்ர மூர்த்வாம்நாய ப்ரதிஷ்டிதம்
ஆவயோः பாமாகாரம் யோவேத்தி ஸ சிவः ஸ்வயம்
சிவாதிக்ருமிபர்யந்தம் ப்ராணிநாம் ப்ராணவர்த்மநாம்
நிச்வாஸோச்ச்வாஸ ரூபேண மந்த்ரோயம் வர்த்ததேப்ரியே.

என்று கேவலம் சதாசிவமூர்த்தியே ஸ்ரீமகாதேவிக்கு "நம்மிருவரது சிறந்த வடிவமானதும், ஊர்த்துவமுகத்திலிருந்துண்டான வேதத் (தந்திரம்) திற் பிரதிஷ்டை செய்யப்

பெற்றதும் ஆன ஸ்ரீப்ராஸாதபராமந்திரத்தை எவன் அறிவானோ அவன்தானே சிவனாகிறான். ஓ! எனது காதலியே! சிவன் முதல் புழுவரையில் உள்ள ஜீவஜந்துக்களுக்குள்ள நிச்வாஸ உச்ச்வாஸ (சுவாசம் வாங்குவது விடுவது ஆகிய ரூபத்தினால் இந்தமந்திரம் விளங்குகின்றது!" என்று உபதேசித்திருக்கிறார் 'ஹ்ஸ' என்னும் பிராஸாதமந்திரத்தில் 'ஹ்' என்பது நிசுவாஸ ரூபமென்றும் 'ஸ' உச்சுவாஸ ரூபமென்றும் அறிந்துகொள்ளவேண்டியது. சாஸ்திரப்பிராமண மிருப்பதனால் நமது புருஷர்களுக்குள் இது நல்லொழுக்கமாயிருந்தாலும் ஸ்திரீகளுக்குமாத்திரம் இது துர்வழக்கமென்றே எனக்குத் தோன்றுகின்றது. அந்தத் தேசத்தில் எவ்வாறாகவோ ஸ்திரீகள் சுவதந்திரவதிகளாய்த் தங்களுக்கு அநுகூலமாய்ச் சாஸ்திரங்களைத் தாறுமாறு செய்தமையால் இந்த அநர்த்தங்களெல்லாம் நேரிட்டன. இனி அச்சங்கதியை நிறுத்திக் கதையைக் கேளுங்கள். சபாபத்நிகள் ஸ்ரீ ஜகத்குருவினது ஆஞ்ஞையை அவ்வளவாக மதியாது போய்விட்டதையும், அதனால் மததர்மங்கள் அநுஷ்டிப்பாரில்லாமல் அழிந்து போகும்படியாக நேரிட்டதையும் பார்த்துக் கிலேசப்பட்டுக் கம்பீதம்பியார் க்ஷீணித்துப்போகிற மதத்தை நிலைநிறுத்துவதற்காகவும் குருபக்தியை ஸ்திரப்படுத்துவதற்காகவும் சபைகூட்டிப் பூர்வாசார சாஸ்திரமகிமைகளைப் புகழ்ந்து நவநாகரிகவதிகளை நிந்தித்தும் ஒருபெரிய உபந்நியாசம் செய்தார். அது வெகுஅதிகமாயிருந்தமையால் அதன்கடைசி பாகத்தை மாத்திரம் இங்குத் தெரிவிப்பேன் :—

"ஓ மஹா மாதுசிரோமணிகளே! என் உபந்நியாசத்தைக் கேட்டீர்களல்லவா! பிரஜைகள் எவ்வாறு கெட்டுப்போகிறார்களோ கண்டீர்களல்லவா! நவநாகரிகவதிகளால் தேசத்துக்குநேரிடும் அநர்த்தங்களை யறிந்தீர்களல்லவா! அவர்கள் இப்பொழுது புருஷருக்குக் கல்வி கற்பிக்க

வேண்டுமென்கிறார்கள்! நாளைக்குத் தாரமிழந்த புருஷர்களின் மூக்கை அறுக்கவேண்டாமென்பார்கள். அதற்குமேற் புண்ணியபுருஷர்களை இரும்புப்பெட்டியில் வைத்துத் தாளிடப் படாதென்பார்கள். அதின்பிறகு விருத்த புருஷர்கள் தங்கள் பத்நியுடன் சககமநம் செய்யக்கூடாதென்பார்கள்; கடைசியாக மனைவியை யிழந்த புருஷர்கள் மறுபடியும் விவாகம் செய்துகொள்ளலாம் என்பார்கள். இவ்வளவு வந்தது இன்னும் எதற்குத்தான் வாராது? அந்தத்துஷ்டஸ்திரிகளின் முயற்சியாகிற முளையை விரியவொட்டாமல் நாம் அதைச்சிறிதா யிருக்கும்போதே கிள்ளி யெறியவேண்டும். தேசாசாரத்தைப் பாதுகாக்கவேண்டும். சாஸ்திரதர்மங்களை நிலைப்படுத்தவேண்டும். தேசமதாபிமானத்தை வகிக்கவேண்டும். அந்தமூடஸ்திரீகள் சாஸ்திரஞானமில்லாதவர்களாய் யுக்திவாதங்கள் செய்கிறார்கள். சாஸ்திரத்திற் பற்றுள்ள நமக்கு மனிதனது புத்தி பிரமாணமன்று, மேற்சொன்னமதத்தின் உண்மை, சாஸ்திரத்தினாலல்லாமல் வேறு எதனால் அறியலாகும்? பாவிகளான நவநாகரிகவதிகள் சாஸ்திரவிரோதமான துவாதச (12) மகா பாதகங்களிலும் மகா கொடியதான சேனைக்கிழங்கை இரகசியமாய் யாரும் அறியாமல் தின்கின்றார்களாம்! எவ்வளவு கொடுந்தொழில் செய்கின்றார்கள் பார்த்தீர்களா? பார்த்ததாக நீங்கள் யாரும் சொல்லாதிருப்பதேன்! தன்பட்சத்தை ஸ்தாபிப்பதற்காகவும் பிறர்பட்சத்தை நிராகரிப்பதற்காகவும் பொய்சொல்லலாம். மதவிஷயத்திற் பொய்யினால் யாதொரு பாவமுமில்லை. இது சூட்சும தர்மம். என்வார்த்தையை நம்புங்கள், பார்க்காவிட்டாலும் பார்த்ததாக நீங்கள் இப்போது சொல்லுகிறீர்கள். எனக்கு இப்பொழுது மிகவும் சந்தோஷமாயிருக்கிறது. நீங்கள் நவநாகரீகவதிகளின் போதனையை நிர்மூலமாக்குவதற்கும் ஸ்ரீ ஜகத்குருவினது அதிகாரத்தைப் பரவச்செய்வதற்கும் தேசமதாபிமானமுள்

ளவர்களாய் உங்கள் பிராணனைத் துரும்புபோல் நினைத்துச் சண்டைசெய்யுங்கள்.''

இந்த உபந்நியாசத்தால் ஜனங்களது மனமெல்லாம் பூர்வாசாரபட்சம் திரும்பினதாகக் காணப்பட்டது. மறுநாள் முதல்ஜனங்கள்நவநாகரிகவதிகள்விஷயத்தில் அநேக பொய்கள் சொல்லியும் அநேக தோஷங்கள் அவர்கள் மேற் கற்பித்தும் அநேக அபவாதங்களை யுண்டாக்கியும், அவர்களை மூர்க்கர்களான ஜனங்கள்முன் ஏளனம் செய்யவும் ஆரம்பித்தார்கள். இந்தப்பாமர ஜனங்களின் அபிப்பிராயப் பிரவாகத்தை அணைகட்டித்தடுக்க என் எஜமானியும்நானுங் கூடப் புருஷர்களது சுதந்திரத்தைப் பற்றி உபந்நியாசம் செய்ய ஆரம்பித்தோம். என் உபந்நியாசத்தின் பயனைப் பற்றி அடுத்த அத்தியாயத்திற் கூறுவேன்.

---

## அத்தியாயம்—8.

---

கம்பீதம்பியார் உபந்நியாசஞ்செய்த மூன்றுநாள் "புருஷர்களது சுதந்திரங்களைக் குறித்துச் சத்யராஜாசார்யன் உபந்நியாசம் செய்யப்போகின்றமையாற் புருஷர்கள் ஸ்திரீகள் ஆகிய மஹாஜனங்களெல்லோரையும் கவர்ண்மெண்ட் பாடசாலை மண்டபத்துக்கு ஞாயிற்றுக்கிழமை காலை விஜயம் செய்யும்படி பிரார்த்திக்கிறோம்'' என்கிற ஒரு விளம்பரப்பத்திரிகையை என் எஜமானியான பாண்டீபங்கீயார் நகரவாசிகளனைவர்க்கும் அனுப்பினார். காலவிபரீதத்தாலுண்டான அந்த உற்பாதத்தைப் பார்க்கவேண்டுமென்று அன்று அதிகாலையிலேயே நகரத்திலுள்ள ஸ்திரீகளனைவரும் நகரத்திலுள்ள பாடசாலை மண்டபத்துக்கு வந்து அருளிச் சபை நிறைந்திருந்தார்கள். அப்படி வந்தவர்களிலே துண்டீலண்டியாரும், கம்பீதம்பியாரும் அவர்கள் பரி

வாரங்களும் முன்னதாக வந்து உயர்ந்த ஆசனத்தில் உட்கார்ந்திருந்தார்கள். கலகம் உண்டாகாமல் எல்லாவற்றையும் ஒழுங்காய் நடத்துவதற்காக எனது எஜமானியின் வேண்டுகோளின்படி சில போலீசு சேவகர்கள், கையில் தடியுடனே வந்திருந்தார்கள். உபந்நியாசகாலம் சமீபித்த பொழுது நான் என் எசமானியுடன்கூட அந்த மண்டபத்திற்குட் சென்றபொழுது, நகரத்து ஸ்திரீ மஹாஜனங்கள், "சமையல்வீட்டு மூலையில் அடங்கியிராமற் புருஷ ஆபரணமான லச்சையைவிட்டுப் புருஷன் ஒருவன் ஸ்திரீகளோடுகூட இன்றைக்குச் சபைக்கு வரும்படியாயிற்றே!" என்று ஒருத்தியும், 'சும்மா சபைக்கு வந்ததுமாத்திரமேயன்றி லச்சையைவிட்டு அங்கு ஸ்திரீகள் முன்னின்று நமக்குச் சரிசமானமானவன்போற் பேசப்போகிறானே!' என்று மற்றொருத்தியும், 'காலமகிமையால் எப்படிப்பட்ட விபரீதங்களும் உண்டாகின்றன!' என்று வேறொருத்தியும், "புருஷர்கள் துணிந்து சபையிற் பிரசங்கிக்கவாரம்பித்தால் தேசத்துக்கு அநிஷ்டம் உண்டாகும்" என்று இன்னொருத்தியும் 'இப்படிப் புருஷர்களிஷ்டம்போல் நடக்கும்படி விடுவது எவ்வளவு அவமானகரம்' என்று ஐந்தாவளொருத்தியும் மூக்கின்மேல் விரலைவைத்துக்கொண்டு தங்கள் தங்களுக்குள்ளேயே ஆச்சரியப்பட்டுச் சொல்லிக்கொண்ட வார்த்தைகள் எங்கள் காதிற் பட்டன. அப்பொழுது உபந்நியாசகாலம் சமீபித்தமையாற் சபையோர்களால் துண்டீலண்டீயார் அக்கிராசனாதிபதியாக நியமிக்கப்பட்டார். பிறகு நான் உபந்நியாசம் செய்யவாரம்பித்தேன்.

"ஓ புண்ணியவதிகளே! ஸ்திரீகளுக்குப் போலவே புருஷர்களுக்கும் பகவான் புத்தியை அருளிச்செய்திருக்கிறார்.——"

லும் தாழ்ந்தவர்களாவார்கள். புருஷர்களுக்கு அறிவினாற் பயனொன்றுமில்லை. புருஷர்களுக்கு எல்லாதர்மமும், எல்லாக்கர்மமும், எல்லாப் புண்ணியமும், எல்லா விரதமும், பத்நி சேவையிலேயே அடங்கி யிருக்கின்றன. பத்நிகளின் எச்சிற் போஜனமே புருஷர்களுக்கு மோக்ஷசாதனம். மனைவியின் பாத தீர்த்தத்தைக் குடித்தலே புருஷர்களுக்குப் பாபவிமோசனம்; பத்நிகளின் பாததூளியைத் தரித்தலே புருஷர்களுக்கு சர்வசுகத்தையுங் கொடுப்பது. புருஷர்களுக்குப் பத்நி ஒருத்தியே சிறந்ததெய்வம். புருஷர்களுக்குப் பத்நிசேவையொன்றே சாஸ்திரத்தில் ஏற்பட்ட நிரந்தரமான தர்மம்.

ஓ, மாதுசிரோமணிகளே, தாய்மார்களே! நியாயபுத்தியால் ஆலோசியுங்கள். சாஸ்திரங்கள் நியாயத்துக்கு விரோதமா யிருக்கும்பொழுது—"

கம்பீதம்பீ.—அதோபார்! சாஸ்திரதூஷணை வருகின்றது. இந்தப்பாவி சாஸ்திரத்தைத் திரஸ்கரிக்கின்றான். சாஸ்திரங்களிலுள்ளது எதுவும் நியாய விரோதமன்று. நித்யமும் நூறுபொய் சொன்னாலும், ஆயிரம் கொலை செய்தாலும், லட்சம் களவுசெய்தாலும் சாஸ்திரத்திற் சொல்லியிருந்தால் இவைகளெல்லாம் விசேஷதர்மமேயாகும். ஓ, என் சகோதரிகளே! இப்படித்தாழ்ந்த ஆண் ஜன்மத்திற் பிறந்த வீணன் ஒருவன் சாஸ்திரத்தை நிந்தித்துக்கொண்டிருக்கையில், நீங்கள் காதுகொடுத்துக் கேட்டுக்கொண்டு சும்மா இருப்பதேன்? உங்களிடத்துள்ள சாஸ்திராபிமானம் நசித்துப் போய்விட்டதா? நீங்கள் ஸ்திரீஜன்மம் எடுக்கவில்லையா?

ஒருத்தி.—இந்தப் புருஷப்புழுவைச் சாகும்படி அடியுங்கள்.

மற்றொருத்தி.—சாஸ்திர தூஷணம் செய்த இவனது நாக்கை அறுத்தெரியுங்கள்.

இன்னொருத்தி.—வெட்கமில்லாமற் சபைக்கு நடந்து வந்த இவனைக்கால்முறிய அடியுங்கள்.

வேறொருத்தி.—புருஷர் கல்வியென்று வீண்வார்த்தைகளைக் கூவின இவன் கழுத்தைப் பிடியுங்கள்.

இவ்விதமாகப்பலர் பலவிதமாக என்னைத் தூஷித்துக்கொண்டும் பரிகாசம் செய்து கொண்டும் என்மேல் விழுந்து என் எஜமானியார் தடுத்தும் நில்லாமற் சிலர் நெற்றியின்மீதும் சிலர் முதுகின்பேரிலும், சிலர் முகத்தின்மேலும், கைகளாலும் முழங்கைகளாலும் கால்களினாலும் குத்தியும் இடித்தும் உதைத்தும் என் பிராணனை மாத்திரம் போக்காது வருத்தினார்கள். போலீசுக்காரிகள் அந்தச்சந்தடியில் ஆயுதபாணிகளாய் எமபடர்களைப்போல் என்னைக் காப்பாற்ற வந்தமாதிரி என் சமீபம் வந்தார்களெனினும அவர்கள்குறி விசித்திரமானபடியாலோ அல்லது வேறு எக்காரணத்தாலோ அவர்கள் பிரம்படிகளெல்லாம் என்மீது விழுந்தனவேயொழிய அவ்வாறு சந்தடிசெய்தவர்கள் ஒருவர்மீதும் விழவில்லை. சிறிதுநேரத்தில் நான் மூர்ச்சையாய்விட்டேன். போலீசுக்காரிகள் எனக்குச் சைத்தியோபசாரங்கள் செய்து மூர்ச்சை தெளிவித்தபிறகு என்னைத் தர்மவைத்தியசாலைக்கு வண்டியிற் கொண்டுபோய் அங்குத் துரைத்தன வைத்தியஸ்திரீகளிடத்தில் ஒப்பித்தார்கள். நான் இருபதுநாள் அவர்கள் சிகிச்சையில் இருந்தபிறகு எழுந்து பூமியின்மேல் நடந்து சிறிது உலாவ ஆரம்பித்தேன். ராஜாங்க உத்தியோக ஸ்திரீகள் இந்தக் கலகத்தை யுண்டாக்கினவர்களைப் பிடித்துக்கொள்ள வேண்ண்டுமென்று போலீசு ஸ்திரீகளுக்குக் கட்டளையிட்டும், அவர்கள் அந்தச் சச்சரவு காலத்தில் அங்கிருந்து பயத்

தினூற் கண்களைத் திறக்கமுடியாது பாராதிருந்தபடியால் ஒருவரையாவது பிடியாது போய்விட்டார்கள். நான் வைத்திய சாலையிலிருந்த நாட்களில் தினந்தோறும் தப்பாது பாண்டீபங்கியார் வந்து என்னைப் பார்த்துக்கொண்டு போயிருந்தார். வைத்தியசாலை அதிகாரியும் என்மீது பிள்ளையிடத்துப்போல் அன்புகூர்ந்து எனக்கு வேண்டிய பத்தியவகைகளைத் தாமே விசாரித்து நல்ல மருந்துகள் கொடுத்துக்கொண்டு வந்தார். அந்தக்காலத்திற் பாண்டீபங்கியார் தாயாரும் இரண்டு மூன்றுதடவை வைத்திய சாலைக்கு வந்து என் க்ஷேமத்தை விசாரித்து, ஒருநாள் என்னைப்பார்த்து,

"நீ இவ்வாறு அந்நியதேசத்தில திக்கற்ற பட்சிபோல் இறப்பதைவிடச் சுகமாய் உன் நாட்டிற்குப்போய்த் துன்பமின்றி இருக்கக்கூடாதா?" என்று கேட்டாள்.

அப்பொழுது எங்களிருவருக்கும் இவ்வாறு சிறிது சம்பாஷணை நடந்தது:—

"அம்மா! எனக்கும் சுதேசத்திற்குப் போகவேண்டுமென்றேயிருக்கிறது."

"அப்படியிருந்தால் உடனே போகக்கூடாதா?"

"போக எனக்குச் சக்தியுமில்லை. எங்கள் தேசத்துக்கு எனக்கு வழியுந் தெரியாது."

"வழி தெரியாமல் உங்கள் தேசத்திலிருந்து எங்கள் தேசத்திற்கு எப்படி வந்தாய்?"

"குருவினது மகிமையால்."

"இப்பொழுதும் மறுபடியும் குருமகிமையாலேயே திரும்பிப்போ."

"இப்பொழுதும் வழிகாண்பிக்க எனது குரு இங்கு இல்லையே."

"குருவாயிருந்து வழிகாட்ட நான் இங்கு இருக்கின்றேன். என் உபதேசத்தைக் கைக்கொள்வாய். நீ சீக்கிரமாய்ப் போகாவிட்டால் உன்னை இங்குள்ளவர்கள் தப்பாது கொன்றுபோடுவார்கள்"

என்று சொல்லி எனக்கு அவள் ஒருமந்திரம் உபதேசித்து, இந்தமந்திரத்தை மூன்று லக்ஷந்தடவை உருப்போட்டாற் சித்தியாகுமென்றும், அப்பொழுது அந்த மந்திர மகிமையால் இஷ்டமான தேசத்திற்குப் போய்ச் சேரலாமென்றுஞ்சொன்னாள். ஒருமாதத்தில் எனக்கு முற்றும் வியாதி சொஸ்தமாய் மறுபடியும் எப்பொழுதும்போலத் தெருவிற்செல்ல ஆரம்பித்தேன். பிறகு வைத்தியசாலையார் எனக்குப் பலமானகாயம் உண்டாயிற்றென்று விடுதலைப்பத்திரங்கொடுத்து அனுப்பிவிட்டார்கள். நான் திரும்பிவந்து பாண்டீபங்கியார் வீட்டில் நுழைந்தேன். நான் தெருவில் போகும் போதெல்லாம் ஸ்திரீகள் என்னைச்சுட்டிக்காண்பித்து ஏளனஞ்செய்தும், இவனை இம்முறை உயிருடன் விடப்படாதென்று தங்களுக்குட் சொல்லிக்கொண்டும் என்னைப்பார்த்துச் சிரிக்க ஆரம்பித்தார்கள். ஸ்திரீகளுக்குச் சுதந்திரம் இருந்ததனால் எப்படிப்பட்ட தீங்குகள் விளைந்தன பார்த்தீர்களா? "நஸ்திரீ ஸ்வாதந்த்ரியமர்ஹதி" என்று சொன்ன நமது சாஸ்திரக்காரன் பைத்தியக்காரனல்லன். சாதாரணமானவர்களுக்குத் தோன்றாதேயொழியச் சர்வஞ்ஞர்களாகிய நமது பூர்வீகர்கள் எவ்வளவோ புத்திமான்கள். நமது தேசத்தில் மாத்திரம் புருஷனென்கிறபெயர் உலகத்திலுள்ளவரையில் நாம் எப்பொழுதும் ஸ்திரீகளுக்குச் சுதந்திரம் அணுவளவும் உண்டாகச் செய்யக் கூடாது.

அப்பொழுது எனக்கு அந்தத்தேசத்தைவிட்டுப் போகவேண்டுமென்கிற புத்தியுண்டாயிற்று. இப்படிச்சொன்ன

மையால் நீங்கள் என்னை அந்தத்தேசத்திலுள்ள ஸ்திரீகளுக்குப் பயந்து ஓடிப்போகின்ற பயங்கொள்ளியென்று எண்ணுவீர்களோ என்னவோ! நீங்கள் அப்படி ஒருபோதும் எண்ணக்கூடாது. மகாபாரத வீரர்களின் ஜநநபூமியாகிய பரதகண்டத்திற் பிறந்து, அதிலும் முக்கியமாய்ப் பயமற்றபிராமண குலத்தில் உற்பவித்த எனக்குப் பௌருஷம் குறையுமா? முக்காலுங் குறையாது குறையாது குறையாது. சமயம் வந்தபோது நான் என்பிராணனையும் துரும்பாக நினைத்துவிடுவேன். ஆனாலும் நான் அந்தத்தேசத்தில் மரித்தால்எனக்கு வீரசுவர்க்கம் கிடைப்பது நிச்சயமாயிருந்தாலும், உங்களுக்கு இந்தக்கதையைச் சொல்லி உங்களைச் சந்தோஷிப்பிக்கிறவர்கள் வேறு ஒருவரும் கிடையார்கள் என்று உங்கள் மீது கருணைகூர்ந்தே நான் என்கையிலிருந்த இந்திரனுக்குச் சமமான ஆசனத்தையும் ரம்பை முதலிய தேவமாதர்களின் சம்போகத்தையும் இழந்தேனே யொழிய வேறுகாரணத்தினாலன்று. என்நிமித்தமாய்க் கஷ்டப்படுகின்ற பாண்டீபங்கியாரைவிட்டு நன்றியற்றவனாய்ச்சுயநயம் கருதிச்செல்லுகின்றேனென்றும் நீங்கள் எண்ணக்கூடாது. என்மூலமாய்ப் பாண்டீபங்கியாருக்கு ஆபத்துக்கள் நேர்ந்ததுவஸ்தவமே. அந்த ஆபத்தைக்கருதியே நான் தங்கள் தேசத்தைவிட்டுச்சென்றால் தன்மகளுக்குக் கஷ்டங்கள் தொலையுமென்று பாண்டீபங்கியாரின் தாயார் எனக்கு அம்மந்திரத்தை யுபதேசித்தாளே யொழிய என்மீதுள்ள ஸ்நேஹதுவான கருணையினால் மாத்திரம் அன்று. அது போகட்டும். நான் அந்தத் தேசத்தை விட முயன்றதற்கு இன்னொரு முக்கிய காரணங்கூடவுண்டு. இந்துக்கள் தேசயாத்திரை செய்து புதியதேசங்களைக் கண்டுபிடிப்பவர்கள் அல்லர்களென்றும், புதிதாய் ஆராய்ந்து சரித்திரங்களை எழுதச்சமர்த்தர்களல்லரென்றும் மேற்றிசையார் நம்மவர்கள்மீது இரண்டு குற்றம் சுமத்தி யிருக்கிறார்கள். இந்த

இரண்டு குற்றங்களையும் போக்கி, நமது தேசத்துக்குக் கீர்த்திகொண்டு வரவேண்டுமென்கிற நல்லெண்ணத்துடன் எனது அருமையான பிராணனை அந்தப் பாழ்ந்தேசத்துக் குப்பலியாக்காமல் விட்டுச்சென்றேன். நான் கண்டுபிடித்த இந்தத் தேசங்களையும் நான் எழுதிய இந்தச் சரித்திரத்தையும் கேட்டவர்களும் கண்டவர்களும், இந்துக்களிடத்தில் இனிமேல் இந்த இரண்டு குற்றங்களையுங்கூற இடமில்லாது இந்துக்கள் எவ்விதத்திலும் சமர்த்தர்களென்று ஒப்புக்கொண்டு நம்மவர்களையும் ஆயிரம் நாவாற் புகழ்ந்து பூஜிக்க ஆரம்பிப்பார்கள் அல்லவா? இதைப்படிக்கும் நண்பர்களே! நமது தேசத்துக்கு நான் சம்பாதித்த இந்தக்கீர்த்தியால் நீங்கள் சிறிதுகாலம்வரையில் திருப்தியடைந்திருங்கள்.

பரதேச யாத்திரையைச் சீக்கிரத்தில் நிறைவேற்ற வேண்டுமென்கிற எண்ணத்துடன் நான் தனிமையாக ரண்டி நகரத்துக்குச் சமீபத்திலிருக்கின்ற காட்டுக்குச் சென்று என எஜமானியார் உபதேசித்த மந்திரத்தை புரச்சரணம் (உருஜபித்தல்) செய்துகொண்டிருக்கையில் ஒரு சித்தர் அகஸ்மாத்தாய் ஆகாயத்தினின்று இறங்கி என் முன் நின்றார். நான் அந்த மகாத்மாவுக்குப் பக்தி பூர்வகமாய் நமஸ்காரஞ்செய்து கைகூப்பி நின்றேன். அந்தச் சித்தசிரேஷ்டர் என்னிடத்துக் காரணமின்றிக் கருணையுடையவராய்ப் பூர்வத்தில் ப்ரவரன் என்பவன் காலுக்குப் பச்சிலைரசம் தேய்த்த சித்தன்தானே யென்றும், மந்திரசித்தி சீக்கிரத்திலுண்டாகாதென்று ஞானதிருஷ்டியாலறிந்து எனக்கு அந்தப் பச்சிலையைக்கொடுக்க வந்ததாகவும் சொல்லி அந்தப் பச்சிலையின் பெயர்கூட எனக்கு அநுக்கிரகித்துமறைந்தார். அந்தப் பச்சிலையின் பெயர் 'துத்தாரபளி'. அதன் இலைகள் குழுக்க ஊமத்தை இலையைப்போல இருக்கும். பூக்கள் மல்லி ஆவாரம்பூவைப் போல் இருக்கும்

அதன் காம்புகள் ஆம்பல் மலரின் காம்புகள் போலிருக்கும். அந்தச் செடியை வேருடன் கொண்டுவந்து அரைத்து இரசத்தைப் பிழிந்து காலில் தேய்த்துக் கொண்டால் நாம் விரும்பும் இடத்துக்கெல்லாம் மனோவேகமாய்ப் போகலாம். இந்தச் செடிகள் விசாகப்பட்டணத்தில் அல்லிதுண்டாவின்மேல் வேண்டியவளவு இருக்கின்றன. நான் அந்தச் செடியினது இரசத்தை உள்ளங்காலிற் பூசிக்கொண்டு லங்கா தவீபத்துக்குப் போகவேண்டுமென்று மனத்தில் நினைத்தபொழுதே நிமிஷமாத்திரத்தில் நான் அந்த லங்காபட்டணம் சேர்ந்தேன். இந்த யாத்திரைக்கதை முதலியவற்றைப்பற்றி உங்களுக்குப் பின்னுற் சொல்லுவேன். நான் அந்நாட்டை விட்டுச் சென்றதினத்தோடு ரண்டி தேசத்தில் மூன்று வருஷம் இரண்டுமாதம் பத்தொன்பதுநாளிருந்தேன்.

பெண்மலையாளம்

முற்றிற்று.

---

PRINTED AT THE ROYAL VICTORIA PRESS.

# நன்றியறியாமகன்.

## ஓர் இனியதமிழ்க்கதை.

இக்கதையினால் பதிவிரதாதர்மம் இன்னதென்றும், எவ்வளவு நல்லவர்களானாலும் அகம்பாவம் உண்டாயின் மற்ற தீக்குணங்கள் தாமேயுண்டாய் அழிந்துபோவார்களென்றும் கோபம் தந்தை யென்றும் மகனென்றும்பாராது கெடுக்குமென்றும் ஒவ்வொருவரும் நன்றியறிவு பாராட்டவேண்டுமென்றும் அறியலாகும். இக்கதை படிக்கப்படிக்க மனதில் கிளர்ச்சியையுண்டாக்கும். கேட்கக்கேட்க ஆனந்தத்தையளிக்கும். ஒவ்வொரு சிறுவனும் சிறுமியும் அவசியம் வாங்கிப் படிக்கவேண்டியது.

விலை அணா 8. வீ. பீ. மூலமாய் 11 அணா.

---

## ஜனப்பிரியன்.

### ஒரு மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

இதில் ஆடவரும் பெண்டிரும் அறியவேண்டிய பல நீதிகளும் சாஸ்திரக்கருத்துகளும், அவர்களுக்கு இன்பமளிக்கத்தக்க விநோத கதைகளும் எளியதமிழ் நடையில் எழுதப்பட்டு வெளிவரும்.

| | ரூபா. | அணா. |
|---|---|---|
| வருஷம் ஒன்றுக்கு தபால்கூலியுடன் ... | 2 | 0 |
| ஆறுமாதத்திற்கு ... ... ... | 1 | 0 |
| தனிப்பத்திரிகை ... ... ... | 0 | 3 |

---

## கட்டுரைத்தொகுதி.

இதில் தெளிவானநடையில் பல விஷயங்களைப்பற்றி 64-வியாசங்கள் எழுதப்பட்டு உள்ளன. தமிழ்கற்போருக்கு அத்தியாவசியமானது.

விலை அணா. 8. வீ. பீ. மூலமாய் 12 அணா.

க. கிருஷ்ணஸ்வாமி அய்யர், B. A.,
சென்ட்ரல் புக்டெபோ
322, லிங்கிசெட்டித்தெரு,
சென்னை.

# விற்பனைக்குத் தயாராயிருக்கும் புத்தக அட்டவணை.

| | ரூபா. | அ. | பை. |
|---|---|---|---|
| கலாவதி—ஒரு தமிழ் நாடகம் ... ... | 1 | 8 | 0 |
| காலிகோ கட்டடம் ... | 1 | 12 | 0 |
| ரூபாவதி— ... ... ... | 1 | 0 | 0 |
| சுகுணசுகேசர் அல்லது நட்பும் காதலும் ... | 0 | 8 | 0 |
| சாசாங்கி— ... ... ... | 1 | 0 | 0 |
| லீலாவதி சுலோசனம் ... ... ... | 0 | 12 | 0 |
| போஜசரித்திரம் ... ... ... | 1 | 0 | 0 |
| மாலதி மாதவம் ... ... ... | 0 | 5 | 0 |
| நாகாநந்தம் ... ... ... | 0 | 3 | 0 |
| குணசீலன்—ஒரு தமிழ்க்கதை ... ... | 0 | 10 | 0 |
| மகாதேவன்— ... ... ... | 0 | 6 | 0 |
| தில்லர் சரித்திரம் ... ... ... | 1 | 0 | 0 |
| சதாரத்னவளி ... ... ... | 1 | 0 | 0 |
| பாகசாஸ்திரம் ... ... ... | 2 | 0 | 0 |
| கமலாம்பாள் சரித்திரம் ... ... ... | 1 | 8 | 0 |
| பத்மாவதி சரித்திரம் 2—பாகங்கள் ... ... | 1 | 8 | 0 |
| தினசயாரு ... ... ... | 0 | 8 | 0 |
| கள்ளர் தலைவன் ... ... ... | 0 | 8 | 0 |
| ஆரிய சபா ... ... ... | 0 | 4 | 0 |
| விநோதகதைகள் ... ... ... | 0 | 4 | 0 |
| பார்வதீபுரத்தில் நடந்த அபவாதம் ... ... | 0 | 2 | 0 |
| நன்றியறியாமகன் ... ... ... | 0 | 8 | 0 |
| வித்யாரண்யாகரம் ... ... ... | 0 | 8 | 0 |

கே. கிருஷ்ணசாமி அய்யர் B. A.,

புஸ்தகசாலை

சென்னப்பட்டணம்

